*Muracoli*

*Muracu 3, oli 12*

*June 29, 1956*

Record no. 945

# முரசொலி

வார இதழ் — மு. கருணாநிதி

புரசு 3 | 29-6-56 | வெள்ளி | ஒலி 12


## தட்சிணப் பிரதேசம்--பிச்சைக்காரர் ஆதரவு!




பதவியற்ற ஆச்சாரியாருக்கு "சீசனு"க்கு ஒரு பிரச்சாரம் தேவைப்படுகிறது என்பதைநாடறியும். திடீரென்று நாஸ்திகர்களை அழிப்பேன் என நாப்பரை கொட்டுவார்! பி. சி. ஜி. யை முறிப்பேன் என சல்லடம் கட்டுவார்! அணுகுண்டைத் தடுப்பேன் என அவராகவேத் தாவிக் குதிப்பார்! இப்படி யெல்லாம் "சீசன் பிரச்சாரம்" நடக்கும். அதற்கு அவர் சிஷ்யகோடிகளும் பின்பாட்டு பாடுவர்! அவர்களிலே முதல்வர் சி. சுப்ரமணியம். இப்போது அவர்கள் தட்சிணப் பிரதேச அமைப்புக்கு ஆதரவு தேடி தங்கள் பிரச்சாரத்தை நடத்தி வருகிறார்கள். இது ஒரு "சீசன்!"

இந்த நேரத்தில் பத்திரிகைகளில் ஒரு செய்தி வந்திருக்கிறது. அதாவது:—

**கோவை, ஜூன்-22.**

ரயில்களில் பாட்டுப்பாடி பிச்சையெடுக்கும் பிச்சைக்காரர்கள் தட்சிண பிரதேசத்தை ஆதரிக்கின்றனர். பெரிய ராஜ்யங்கள் ஏற்படுவதால் உண்டாகும் பலன்களைப்பற்றி பாட்டுக்களை அவர்கள் பாடுகிறார்கள். ஒருவர், அந்த **டிக்கெட்டில்லாப் பிச்சைக்காரர்களைக்** கண்டு பேசியபோது, இந்தப் பாட்டுக்கள் பாடினால் காசும் அதிகம் கிடைப்பதாகவும், இன்னும் மூன்று நான்கு மாதங்களுக்கு இதுவேதான் ரயில்களில் பாடப்படும் என்றும் கூறினார்களாம்.

[பி. டி. ஐ]

மித்திரன், தினமணி, முதலிய தேசீய ஏடுகள் அனைத்தும் இந்தச் செய்தியை வெளியிட்டிருக்கின்றன.

டிக்கட்டில்லா பரதேசி—
"இது நல்ல பிசினஸ் என்கிறான்.

பதவியில்லா ஆச்சாரியார்—
"இது நல்ல பிரச்சாரம் என்கிறார்.

இரண்டையும் இணைத்து நமது ஓவியர் செல்லப்பன் இந்தஅருமையான கேலிச் சித்திரத்தை வழங்குகிறார்; சிந்தனைக்கு வேலைதா!

● ● ●

# இலக்கியத்தில் நாம்

மூவேந்தர் கட்டியாண்ட எல்லை, முத்தமிழ்க் கொல்லை சொல்லுக்குச் சொல் சுவை கூட்டி சுந்தரக் கவி பாடிடும் புலவர் கூட்டம், பூ மொய்க்கும் வண்டு போல—அப்புரவலர் தம் குடை நிழலில் சூழ்ந்திருந்தனர். பகைக் குலத்து மன்னர்களும் பாராட்டிடும் விதத்திலே அவர் தம் அரசுநெறி, போர்த்திறம் மான உணர்வு, வளையாத செங்கோலுக்கு வண்ணம் தீட்டி, கோட்டைக் கொடி மரத்திலே கொற்றத்தின் புகழ்பாடி 'மண்ணுள் வேந்தர்க் கெல்லாம் மானமே மகுடம்' என்ற உணர்ச்சி வரிகள், புகழ் பட்டயம், அரசியல் நாகரீகம் உரைக்கும் கல்வெட்டுகளாக தமிழ் இலக்கியச் சந்தையிலே பூபாளம் பாடிக் கொண்டிருக்கிற தென்றல், இலட்சிய வாழ்வும், எதற்கும், யாருக்கும் எப்பொழுதும் தலை வணங்கா துணிவுமிக்க புலவர் பெரு மக்கள், அந்த நாடாண்ட நல்லவர்களின் சிந்தனைச் சிமிழ்களாய்; அறிவுப்பெட்டகங்களாய்; வழிகாட்டும் கலங்கரைகளாய் இருந்ததே காரணமென்றறிகின்றோம்.

இந்தா கோடி, அத்தனையும் வைரக் குவியல்! பொற்பாளங்கள்! முத்துப் புதையல்! இத்தனையும் எடுத்துக் கொள். ஆனால், நீ எமை நத்திக் கிடக்க வேண்டும், நாம் அசைக்கின்ற விரல் நுனிக்கு ஆடுகிற பம்பரமாக இருக்க வேண்டும், என்று கோடி இட்டழைத்தாலும் தொடாத—கையால் மட்டுமல்ல, உள்ளத்தாலும் தொடாத தூய மணிகள் நலம் பாடும் தமிழ் பேசி, நாட்டின் நடைமுறைகளை, நடமாடும் சட்ட புத்தகங்களாக-அரசுக்கு, ஆட்சியந்திரத்திற்கு மூல கர்த்தாக்களாக இருந்தனர் என்பதும் இலககியம் சொல்லும் நம் இன வரலாறு!

அந்தப் புலவர் மணிகளுள் ஒரு பொறுக்குமணி, தமிழ் அன்னையின் ஆரத்திற்கு அணி செய்யும் ஏகம்பவாணன்.

தமிழ்க் கலையில் ஆரியக் கடை விரித்த அனுதைக் கம்பனல்ல இவன! ஆரியம் என்றால் அனல் கக்கிடும் விழியினன் இந்த ஏகம்பன். எத்தனையோ வேலி நஞ்சைக்கும், நண்டும், கெண்டையும் புரளும் வளமான சோலைக்கும் சொந்தக்காரன். சோறுடைத்த சோழ நாட்டிற்கு அவன் ஓர் பாரி வள்ளல். வேழம் கட்டி, விலாப்புடைக்கத் தின்று கொழுத்த வீரர்களும், தினவெடுத்த தோள் கொண்ட தீரர்களும் போர் அடித்து—பொற்குவியலென, நெற்குன்றுகளை குவித்துவிடும் பெரும் பண்ணைக்காரன, மதியோடு...மாநிதியும் அதோடு மன வளமும் கொண்டோன். மன்னன் அவைக்கு அவன் ஓர் மணி விளக்கு!

அந்த மணி விளக்கின் துணை விளக்கு, மங்காத தமிழ் பண்பும், மாறுத உழுவலன்பும் கொண்ட மறத்தி! தமிழ் குலத்து மங்கை! தாய்க்குலத்தின் தீப ஜோதி!

அந்தப் புலவனின் வாழ்வில் ஒளி கூட்ட வந்த குடும்ப விளக்கு! முல்லை மணமும், முத்துச் சிரிப்பும் மட்டுமல்ல, சத்தான கருத்துக்கும் ஊற்றிடமாக விளங்கினள் அத்தோகை மயில்!

அறிவோடு அறிவு, கைபிணைத்து நின்றது! அந்தக் குடும்பம் ஓர் கலைக்கூடம், கவி பிறக்கும் நீரோடை! 'கற்கண்டே! என கட்டிலறைப் பூச்செண்டே!' என்று சொல்லாரம் தொடுக்கும் காதற் புலவனாக மட்டும் அவன் காலம் கழித்தானில்லை!

சொல்லேர்உழவன் அரசவையில், வில்லேர் உழவன், அடுகளத்தில், நல்லேர் உழவன் நடைமுறையில்

ஏரடிப்பான், ஏற்றம் இறைப்பான், எரு அணைப்பான், எடுக்க வேண்டிய களைகளை எடுத்தெறிவான். நெற்றி வியர்வை நிலத்தில் விழ, உடலையும் வளைத்து உழைக்கின்ற பாட்டாளியாகவும் இருந்தான். எழுது கோலோடு நிற்பதுதான என புலமைக்கு அழகு. எழுதிய கையால் ஏர் பிடிப்பது என் புகழுக்கு இழுக்கு என்று 'டம்பம்' பேசும் 'சுகவாசக்' கவிஞனாக இருக்க விரும்பவில்லையவன, எனவே, எழுவான் சூரியன் எழுவதற்கு முன்னால்!

பனி தூங்கும் புல் நிறைந்த வரப்புகளில் நடப்பான், பொன் சுமந்த கதிர் அசையும் அவன் கவி பாடும் மென் இதழ்கள் தமிழ் இசைக்கும், இப்படி ஒவ்வொரு நாளும், அனறும் ஒரு நாள் அப்படித்தான். விடிந்ததும் வயல் நோக்கி நடந்தான். அறுவடை காலமானதால் தொடர்ந்து பல நாட்கள் அரசவைக்குச் செல்ல மறந்தான். விளக்கில்லா கூடம்; நிலவில்லா வானம், தாமரையில்லா தடாகம், போலக் கிடந்தது அரசவை!

அத்தாணி மண்டபத்துப் புலவர் மேடையில் ஓரிடம் காலி! வெறிச்சோடிக் கிடந்தது. காத்திருந்தான் காவலன், ஒரு நாள், பல நாள்...ஆளனுப்பினன் 'வேலையாம் அவருக்கு வயற் காட்டில்!' என்ற பதிலோடு திரும்பினன் சென்றவன். அரசனுக்கோ ஆத்திரம்; அணி தேர்ப் புரவி ஆட் பெரும்படை; ஆள், அம்பு, அரச போகம், இத்தனையும் அவன் விரல் நுனியில்! இருந்தும் அந்த ஒரு புலவன்; உயர் கலைஞன்; ஒப்பற்ற அறிஞன்; அரசியல் அதிர்ச்சிகளால், உள்நாட்டுப் புயலால், அரசு கப்பல் ஆட்டம் கொடுக்கும்போதெல்லாம் 'நங்கூரமாக'ப் பயன்படும் அந்த நற்றமிழ் பாடும் கவிஞன் அருகில்லாதிருப்பதை அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை! அன்பு—ஆத்திரமாகி, ஏகம்பனின் இல்லம் நோக்கி விரைந்தான் மன்னன், வாயில் தனை அடைந்தான்! வந்துவிட்டான் வேந்தன், வண்டமிழ் நாட்டின் காவலன் என்பதறிந்தாள் அத் தமிழ் நிலத்துப் பூங்குயில்! தென்னவனை வாழ்த்தினாள்; வணக்கம் கூறி நின்றாள்!

"புலவன் எங்கே?" மன்னனிடமிருந்து பொங்கிவந்த ஆத்திரம் இது!

'வயக்காடு சென்றுள்ளார், வந்திடுவார்' அளந்தளந்து சொன்னாள் அப் பிறை நுதலாள்.

ஆயிரம்தான் இருந்தாலும், அரசபோகம்,அதிகாரச் செருக்கு அந்த ஒரு வினாடி; முல்லைசூழ் நாட்டு வேந்தனை சொல் பிறழ விட்டது! அய்யகோ, சோழ மன்னன்; சொல்லிழுக்குப் பட்டான்; நாகாக்க மறந்தே போனான்!

"வயக்காடு போனானும்; அங்கென்ன வேலை; முடி நடப் போனானோ?" வேந்தனின் தடிப்பேறிய நாவிலிருந்து இப்படி உதிர்ந்தன வார்த்தைகள்.

இதைக் கேட்டாள் குலவிளக்கு; கொதித்தெழுந்தாள்; "தேரா மன்னா! நனறு சொன்னாய், முடி நடத்தான் போயிருக்கிறான் என் கணவன்; எந்த முடியைத் தெரியுமா காவலனே! மூவேந்தன் பெரும்படையை எருவாக்கி, அப்படையினரின் பெருக்கெடுக்கும் ரத்தவெள்ளத்தை நீராக்கி, மதங்கொண்ட யானைகளின் காலடியிலே சிக்கிச் சிதைந்து குழம்பிக் கிடக்கும் பிணத்தைச் சேறாக்கி, மூவேந்தரின் மணிமுடிகளைப் பிடுங்கி அதிலே நாற்றாக நடத்தான் போயிருக்கிறான் என கணவன்!" கண்ணில் கனல் பெருக, கட்டழகு சீறி நிற்க, 'நாகாக்கத் தவறினாய்; நாடாள வந்துவிட்டாய்; சீ! சீ! மனிதா உனக்கென்ன வாய்!' என்றெல்லாம் சபித்தாள். சினம் கொண்ட பாம்புபோல்—சீறி நிற்கும் பெண் புலிபோல், சொல்லம்பால் தாக்கினாள்! 'பொல்லாதவனே, புலவன்மனைவியடா நான்!' என்று சொல்லாமல் சொல்லி நின்றாள்; பாயவரும் புலியையும் கைமுறத்தால் துரத்துகின்ற தமிழ் நெஞ்சம்! 'சென்று வா மகனே—வென்று வா; இன்றேல் செத்து மடி' என்று வீரக் குரல் எழுப்பும் மறக்குடி மங்கையின் வழிவந்த அப் பெண் வேங்கை! அத்தகைய புலவன் வீட்டுக்குயிற் பேடு ஒருத்தியின் பெற்றி கூறும் பாட்டு; தாய்க் குலத்தின் வெற்றி பொறித்த இலக்கியக் கல்வெட்டு; அது—இதோ;

"சேனை தழையாக்கிச்
செங்குருதி நீர் தேக்கி
ஆனைமிதித்த வருஞ்சேற்றில்—
மானபரன்
பாவேந்தர் வேந்தன் பறித்து
நட்டானே கம்பன்
மூவேந்தர் தங்கள் முடி!"

(வி)

## இராவணன் பரம்பரை மூத்தது!

இலங்கையின் ஆதி குடி மக்கள் தமிழர்களே என்று ஒரு சிங்கள ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்திருப்பது இப்போதுள்ள இலங்கை அரசினருக்கு ஒரு படிப்பினையாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறோம். சிங்கள நாகரிகம் இலங்கையில் தோன்றியது கி மு, 543-ஆம் ஆண்டில்தானென்றும் 2500 ஆண்டுகளுக்கு முன்னமேயே தமிழர்களுடைய நாகரிகம் அங்கு நிலைத்திருந்ததற்கு அங்கு தோண்டி யெடுக்கப்பட்ட முதுமக்கள் தாழியே சான்றாகுமென்றும் பொருள்படும்படி இலங்கைப் புதை பொருள் ஆராய்ச்சித் துறைத் தலைமை அதிகாரியாகிய டாக்டர் பரணவிதாரண, கூறி யிருக்கிறார். அவருடைய ஆராய்ச்சியின் உண்மைகளை இலங்கை அரசினர் ஆழ்ந்து கவனித்தால், அவர்கள் இப்போது தமிழர்களுக்கு எதிரிடையாக இயற்றியுள்ள சட்டம் எவ்வளவு நேர்மையற்றது என்று புலப்படும். புராதனச் சான்றாகிய முதுமக்கள் தாழியை விட முற்காலத்திய சான்றைச் சிங்களர்கள் காட்ட முடியாது. ஆகையால் வரலாற்றின் உண்மையை அறிந்து புதிய ஆட்சி மொழிச் சட்டத்தின் அநீதியைச் சிங்கள அரசினர் உணர வேண்டுமென்று விரும்புகிறோம்.

'தமிழ்நாடு' 24—6—56.



# தலையங்கம்

ஆண்ட இனத்தால் மீண்டும் முற்றுகை;
மாண்டிடும் புழுவே மகுடம் கழற்று!

சென்னை 29--6--56 வெள்ளி

## ஓநாய்களே; ஓநாய்களே!

ஆட்சிபீட மேறியவர்களைக் கண்டு, கேட்டு, பேசி பிரச்னைக்கு முடிவு காணலாம்; கொட்டுகிற வறுமைத் தேளுக்கும், முட்டுகிற கடனென்னும் மாட்டிற்கும் முடிவு கட்டலாம் என எதிர்பார்த்து ஏமாற்றம் கண்ட என். ஜி. ஓ, க்களில் தீவிரமானவர் ஒருவர் சென்னை கோட்டை கோடிக் கம்பத்தின் கீழே உண்ணாவிரதம் இருந்த ஒரு குற்றத்திற்காக அரசினரால் கைது செய்யப்பட்டிருக்கிறார்; சென்ற இருபத்தாறும் தேதியன்று!

கோடிக் கம்பத்தின் கீழே உண்ணா நோன்பைக் கடைப்பிடித்தவர் ஒரு காந்தியாராக இருந்து; கம்பத்தின் உச்சியிலே ஒரு யூனியன் ஜாக் கோடிமட்டும் பறந்திருக்குமானால் இந்நேரம் இமயமுதல் குமரி வரை உள்ள மேடைதோறும் ஒப்பாரிக் குரல் கேட்டிருக்கும்; தேசியத் தோழர்களின் வீடு தோறும் கருங்கொடிகள் பறந்திருக்கும்! கைராட்டைக்குப் பதில் ஆயுதத்தை ஏந்தி அன்னிய அரசுக்கு மேலும் ஆழமாகச் சவக்குழி தோண்டும் பணியிலே ஈடுபட்டிருப்பார்கள் இந்த அகிம்சாவாதிகள்!

ஆனால் இன்று நாடு அமைதியாக இருக்கிறது; கேடொன்றும் வராததைப் போலவே இருக்கின்றனர்; ஆட்சி பீடமேறிகளின் அமைதி அழுக்கப்பட்டவர்களின் ஆரவாரத்தைத் தின்று ஏப்பமிட்டுவிடும் என்ற பெரு நினைப்பில்!

ஆனால் பெருமாள் மாட்டுக்காரனின் கையிலே இருக்கும் 'பூம் பூம்' மத்தளத்தைப்போல, மூலவர் ஆச்சாரியாரால் ஆட்டம் போட்டுக்கொண்டிருக்கும் சுப்ரமணியனாரோ வழக்கம் போலவே ஆணவக் கூச்சலை – அதிகாரத் திமிரும், சதிகாரப் பண்பும் கலந்த அக்ரமத்தின் எதிரொலியைக் கிளப்பியிருக்கிறார்.

என். ஜி. ஓ. க்களின் கோரிக்கை கவனிக்கப்படுமா—என்று பத்திரிகை நிருபர்கள் கேட்க, அவர் பதில் சொல்லி யிருக்கிறார்—நேரடி நடவடிக்கை அவர்களுடைய திட்டங்களில் ஒன்றாய் இருக்கும் வரை; நேரடி நடவடிக்கையால் பலன் கிடைக்கும் என்று அவர்கள் நம்பும் வரை, அரசாங்கம் அவர்களுடைய வேண்டுகோளைக் கவனிப்பதென்பது முற்றிலும் இயலாத காரியம் - என்று!

என். ஜி. ஓ. க்கள் கேட்பதிலே நியாயத்தின் அணுவோ, நேர்மையின் நிழலோ, உண்மையின் ஒளியோ சிறிதும் கிடையாது—சொல்லவில்லை அமைச்சர்!

அவர்கள் கோருவதுகுறையுடையது; பித்தலாட்டம் கொண்டது; தேவைக்கு அதிகமாகப் பெறுவ வேண்டுமென்றே கேட்கப்படுவது; விளக்கம் தரும் பீடத்தையேதிட்டமாகக் கொண்டது—விளக்கவில்லை, விளக்கம் தரும் பீடத்தில் அமர்ந்திருக்கும் சுப்ரமணியனார்!

ஆனால் நேரடி நடவடிக்கை என்னும் இரு வார்த்தைகளைப்பற்றி அவர்கள் நினைக்கும் வரையில் அரசாங்கம் அவர்களைச் சீந்தாது என்று சீறியிருக்கிறார், அரசாங்கத்தை என்னவோ பழைய காலத்து பாணியிலே இயங்கி வரும் மிட்டா, மிராசு, ஜமீன் பீடம் என்ற கருத்தை மனதுள் வைத்துக் கொண்டு!

மந்திரியாரின் மிரட்டல் கணை இத்துடன் நின்றுவிடவில்லை.

நேருவைச் சந்திப்பதற்கு அவர்களுடைய தூதுகோஷ்டி முயன்று தோற்று இறுதியில் தேபரை மட்டும் பார்த்து வந்திருக்கிறதல்லவா?

இது எந்த விதத்தில் அதிகாரிகளின் ஒழுங்கு விதிகளைப் பாதிக்கும் என்பதையும் ஆலோசிக்கச் சொல்லி உத்தரவிட்டிருக்கிறாம் அவர்! அதாவது; 'எங்களை ஏமாற்றி விட்டதாக நினைத்து எம் எஜமானரிடமே நேராகச் சென்று கோள் சொல்லிய என். ஜி. ஓ. க்களே! உங்கள் பிரதிநிதிகள் மீது ஒழுங்கு விதிகளைக் காட்டி, சட்டத்தின் இரும்புப் பிடிகளை நீட்டி, உத்தியோக நீக்கம் போன்ற சண்டமாருதச் சூறாவளியில் அவர்களைத் தள்ளப்போகிறேன் உஷார்!" என்று கப்சிப் கபர்தார்' நாடகம் நடத்தியிருக்கிறார்!

என். ஜி. ஓ. க்களின் உரிமைக் கிளர்ச்சிக்குச் சவக்குழி அமைக்க கூடையும் மண் வெட்டியுமாய் அலைந்து கொண்டிருக்கிறார் நிதி அமைச்சர்!

அவரைக் குற்றம் சொல்லிப் பயனில்லை. அவர் சார்ந்திருக்கும் இயக்கமே அகிம்சை என்னும் பெயரில் இரத்தக் களரி செய்யும் வெறியர்களைக் கொண்ட இயக்கமாகும்!

பொது மக்களைப் புல்லென்றும், புழுவென்றும், மண் என்றும் கூளமென்றும் நினைத்து தண்டிரண்டாய்ப் பிளவு செய்யும் மமதையாளர்கள் தேசீயக் கூடாரத்திலே இன்று மிதமிஞ்சிப் போய் விட்டார்கள்!

என். ஜி. ஓ. க்களை அழிப்பேன் என்று மறைமுகமாகச் 'சீடர்' கூறும்போதுதான் 'குருநாதர்' ஆச்சாரியார் சென்ற வாரம் மைலாப்பூரிலே பேசினார்:

"பிரிட்டிஷ் ஆட்சியில் பகிரங்கமாகத் துவேஷப் பிரச்சாரம் நடைபெறவில்லை. இப்போது இந்த துவேஷப் பிரச்சாரம் அரசாங்கத்தால் தடைபடாமல் நடைபெற்று வருகிறது. பிரிட்டிஷ் ஆட்சியில் இத்தகைய இனத் துவேஷப் பிரச்சாரங்களை ஒடுக்க இருந்த சட்ட திட்டங்கள் இன்றைக்கும் இருக்கின்றன. அதை அமுல் நடத்தும் ஆட்சியாளர்கள் பார்த்தும் பார்க்காததுபோல் இருக்கிறார்கள். இதை **ஒழித்துக் கட்ட வேண்டும்!"**

இது ஆச்சாரியாரின் அகிம்சா போதனை! கீதாபோதேசம்! கண்ணன் காட்டிய வழி! உபநிஷதப் பலகணி!

அழி, ஒழி, வெட்டு, வீழ்த்து — வேறெங்கிருந்துமல்ல; தேசீயக் கூடாரத்திலிருந்து மட்டுமே வெறி நிறைந்த இந்த வாசகங்கள் வெளி வருகின்றன!

ஆச்சாரியாரின் பேச்சு வெளி வந்ததுதான் தாமதம்; 'கல்கி' ஏடு தி. க., தி. மு. க. என்ற இரு ஓநாய்கள் 'தமிழ் மக்கள்' என்று பொறிக்கப்பட்ட ஒரு மனிதனை விழுந்து பிராண்டுவதைப் போலவும், இதைக் காமராசர் கவனிக்காமல் கண்களையும், காதுகளையும் மூடிக் கொண்டிருப்பதாகவும் கேலிச் சித்திரம் வரைந்து காட்டியிருக்கிறது!

நாம் ஓநாய்களாம்; அழிக்கப்பட வேண்டுமாம் – ஓநாய்கூட ஓரிரு உயிர்களைத்தான் ஒரு நாளைக்குக் கொல்லும்; அதை விட அதிகமாகத் தன் ஆட்சிக் காலத்தில் பிண மலைகளைக் குவித்து, தாலி அறுத்துக் கூந்தல் விரித்துக் கோவெனக் கதறும் மாதரையும் சிருஷ்டித்த ஆச்சாரியாரும், அவர்தம் தத்துப் பிள்ளையாம் 'கல்கி'யாரும், கூறுகின்றனர் நம்மைப்பார்த்து ஓநாய்களென்று!

பலி பீடத்தில் தெறித்து விழுந்த தலைகள் நம் தலைகள்! பீறிட்டு ஓடிய இரத்தம் நாம் சிந்திய பச்சை இரத்தம்! அதை நக்கியும், உறிஞ்சியும், மடமட வெனக் குடித்தும் ஏப்பம் விட்டவர்; இன்று நம்மைப் பார்த்தே குற்றச்சாட்டுகளைத் திருப்பியிருக்கிறார்; பொதுமக்களைச் சிறு குழந்தைகள்; பாலுக்கும் கள்ளுக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள் என்று நினைக்கிற ஆச்சாரியார்!

யார் ஓநாய்கள் என்று நிரூபிக்க நம்மிடம் சணக்கில்லாமலா போய்விட்டது குறித்து வைத்திருக்கிறோமே அவர்கள் கொன்று குவித்த பிணங்களின் எண்ணிக்கையை!

கடந்த ஏழு ஆண்டுகளில் போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தின் பயனாக உயிர் துறந்த பொதுமக்கள் **ஆயிரம் பேர்!** நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகங்களோ **நூறு!**

ஆமாம், தோழர்களே! ஹிரோஷிமா, நாகசாகி போன்ற இடங்களில் நடைபெற்ற அணுகுண்டுப் பிரயோகத்தின் சேதக் கணக்கோ என்று நினைத்துவிடாதீர்கள்.

குறித்து வைத்துக் கொள்ளுங்கள்! நம் காந்தீயச் சீடர்களின் அடக்குமுறைப் பேரேட்டிலே இது ஒரு பக்கம்!

அதற்குப் பக்கத்திலேயே இந்தத் தகவல்களையும் குறித்துக் கொள்ளுங்கள்:

1919ம் ஆண்டு ஆஸ்திரியா நாட்டிலே மாபெரும் ஆர்பாட்டமொன்று ஏற்பட்டு, அதன் விளைவாக மூன்று போலீஸ்காரர்களும் கொலை செய்யப்பட்டார்கள்.

இருந்தும் அங்கே **துப்பாக்கிப் பிரயோகம் நடைபெறவேயில்லை.**

அது மட்டுமா? கடந்த எழுபது ஆண்டுகளாக இங்கிலாந்து நாட்டிலே எத்தனை முறை துப்பாக்கிப்பிரயோகம் நடைபெற்றிருக்கிறது என்று நினைக்கிறீர்கள்? ஒரு தடவை கூடக் கிடையாது!

இங்கே ஏழாண்டுகளில் **100** முறை! அங்கே எழுபதாண்டுகளில் ஒரு தடவைகூட இல்லை! இங்கே மறைந்தவர்கள் தொகை **1000**! அங்கேதுப்பாக்கிப்பிரயோகத்திற்காகச் சாகவேண்டிய அவசியமே ஏற்படவில்லை!

— இப்போது சொல்லுங்கள்; நெஞ்சில் கைவைத்துச் சொல்லுங்கள். கூரிய நகங்களைத் தீட்டிக் கொண்டு, சொர சொரப்பான நாக்கைத் தொங்க விட்டுக் கொண்டு இரத்த வெறி பிடித்தலையும் ஓநாய்கள் யார்? கொலை செய்வதையே தொழிலாகக் கொண்ட கொடும் புலிகள் யார்? இரத்தத் தடாகத்திலே நீச்சல் பயிலும், நெறி பிறழ்ந்த நீசர்கள் யார்? அவர்களா? நாங்களா?

# நீட்டோலை

## மு.கருணாநிதி

அன்புள்ள பொன்முடி !

வருகிற பொதுத் தேர்தலுக்கு அபேட்சகர்களைப் பொறுக்குவது சம்பந்தமான நடைமுறைகளையும், விபரங்களையும் தகுதிகளையும் இறுதியாகத் தயாரிக்க காங்கிரஸ் கட்சியின் மத்திய தேர்தல் கமிட்டி மூன்று மணிநேரம் கூடி முடிவுகட்டியிருக்கிறது. மௌனகுரு மௌலானா ஆசாத்; நேருவுக்கு மட்டுமே உள்ள பிரத்தியேக நிழல்—அதாவது சட்டையைக் கழற்றி மாட்டுவதைப்போல் தன்னுடைய நிழலையும் ஆணியில் மாட்டி விட்டு வெளிநாடு சென்று விடுவார்—அத்தகைய அரும் பேறு பெற்ற கருநிழலாம் யு. என். தேபர்ஜி — நேருவின் அந்தரங்க பலம் பந்; காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீமந் நாராயணன் ஆகியோர் கூடி அந்தத் தகுதிகளைத் தயாரித்திருக்கின்றனர். அந்தத் தேர்தல் தகுதிகளை விளக்க 'சுதேசமித்திரன்' ஏடு வெளியூர் 25-ம் நாள் இதழிலே ஒரு கேலிச் சித்திரம் வரைந்திருந்ததையும் நீ பார்த்திருக்கலாம். 'ஹைஜம்ப்' போட்டிக்கான சித்திரம் அது! மிகமிக உயரமான இரு கம்புகள். அதன்மேலே கயிறு! அதைத் தாண்டுவதற்காக வரும் காங்கிரஸ் பிரமுகரோ கத்தரிக்காய் அளவு உயரம் கொண்டவர். அவர் முகத்திலே பீதியும் கலக்கமும்! அருகே தேபார் நின்று கொண்டு பட்டியல் தயாரிக்கிறார். இப்படி அமைந்திருந்தது அந்தச் சித்திரம். மிகக் கடுமையான தகுதித் தேர்வு! அதில் வெற்றி பெற முடியாத காங்கிரஸ் பிரமுகர்! —என்ற வகையிலேதான் சித்திரம் பொருள் தருகிறது. அபேட்சகர்களாக நிற்க விரும்புகிற காங்கிரஸ் சீமான்கள்; காங்கிரஸ் கமிட்டி தயாரித்திருக்கிற தேர்தல் யோக்கியதாம்சங்களைத் தாங்கமாட்டார்கள் என்று 'மித்திரன்' கருதுகிறது. அந்தக் கருத்தை வலியுறுத்துவது போலவே படமும் போட்டுக் காட்டுகிறது!

அப்படியென்ன, அவ்வளவு கடுமையான யோக்யதாம்சங்கள் என்று நீ யோசிப்பாய்; அவைகளை மறுமுறையும் படித்துப் பார் புரியும்! சாதாரணமான தகுதிகள் தான். ஆனாலும் அதற்கே பயப்படுகிறது 'மித்திரன்!' படம் போட்டுப் பரிகசிக்கிறது பாரத மாதா புத்திரர்களை!

ஒவ்வொரு அபேட்சகரும் காங்கிரசின் தீவிர மெம்பராக இருக்க வேண்டுமாம் !

" தீவிர மெம்பர் !" வார்த்தை எவ்வளவு தியாக மெருகோடு காணப்படுகிறது. எவ்வளவு வசிகரமான சொல்! எழுச்சி மயமாக இருக்கிறது கேட்கும்போதே அந்தத் தகுதியை !

'தீவிர மெம்பர்' என்றால் தணல் பட்ட தங்கமென்றுதானே நாம் கருத முடியும்.

வெள்ளையன் அடக்கு முறை ஆயுதத்தைத் தீட்டி வைத்திருந்த அந்தக்காலத்தில் காங்கிரசில் சேருவதென்றால், உற்றார் உறவினர்களிடமிருந்து வாய்க்கரிசி பெற்று, புயலடிக்கும் நேரத்திலே கடல் மீது பாய்மரப் படகில் பயணம் நடத்துவதைப் போல! அவ்வளவு அபாயமானது, ஆபத்து நிரம்பியது! தடியடிகள் விழுமோ, துப்பாக்கி ரவைகள் பாயுமோ, இருட் சிறையோ, இதயம் புண்ணாகும் அவமானச் செயலோ, எதற்கும் தயாரான இரும்பு உள்ளங்கள்தான் சுதந்திர தாகம் தணியப் பெருமலிருந்த அன்றைய காங்கிரசில் உறுப்பினராக முடியும். அவர்களே தீவிர வாதிகள் எனப் பட்டனர். இன்றோ ஒரே வரியில் குறிப்பிட்டு விட்டார்கள் : தீவிர மெம்பர்கள்தான் தேர்தலுக்கு நிற்க முடியுமென்று ! அதாவது சாதாரண நாலணா உறுப்பினர்கள். தாங்கள் எவ்வளவுதான் நாட்டுக்கும் மக்களுக்கும் சேவை செய்திருந்த போதிலும் அவர்கள் சட்ட சபைக்குள் அடி யெடுத்து வைக்க முடியாது !

திருப்பதி கோவிலிலே ஒரு வழக்கம் உண்டாம் : அதிகமாகப் பணம் கொடுத்தால் ஆண்டவனை அருகில் சென்று சேவிக்கும் "ஸ்பெஷல் டிக்கெட்டு" பெறலாமாம் !

அதைப்போன்ற ஸ்பெஷல் அர்ச்சனை சீட்டுகள்தான் இந்தத் தீவிர அங்கத்தினர் தகுதி யென்பது !

பகவத்சிங் பெற்றிருந்த விடுதலை வெறி தேவையில்லை ! திருப்பூர் குமரனுக்கிருந்த தியாக உள்ளம் தேவையில்லை ! வ. உ. சிதம்பரனாரின் வைர நெஞ்சம் தேவையில்லை! தீவிரம்-வெள்ளிக்காசுகளை அள்ளிச் சொரிவதிலே காட்டப் பட்டால் போதும் ! தியாக நெருப்புக் குண்டத்தில் குளித்தெழ வேண்டிய அவசியமில்லை. அவசிய மில்லாவிடினும் அந்த உள்ளம் பெற்றவர்களாயிருக்க வேண்டுமென்ற கட்டாயமுமில்லை ! கஷ்ட நஷ்டங்கள் ஏற்கும் நெஞ்சமா? கவலை அது பற்றி அல்ல ! கட்டணம் நிறையச் செலுத்தக்கூடிய புள்ளியா? கவலை இது பற்றித்தான் இப்போது !

தெளிவாகிறதா பொன்முடி : 'தீவிர மெம்பர்' என்பதற்கான பொருள் என்ன வென்று !

"என் அப்பாவின் பிணம் சுடுகாட்டிலே வேகும்போது நான் சிறைச்சாலையிலே இருந்தேன், ஆகஸ்ட் கலவரத்தின் போது அஞ்சல் நிலையத்திற்கு தீமூட்டிய காரணத்திற்காக! இந்த ஒரு தகுதியை மட்டும் காட்டி ஆயிரக் கணக்கான தடவைகள் கெஞ்சியிருக்கிறேன் தலைவர்களை ! சட்டசபை பார்லிமெண்ட் தேர்தலுக்குக் கூட வேண்டாம் ; கேவலம் ஒரு சாதாரண நகரசபைத் தேர்தலில் நிற்பதற்காவது எனக்கு அனுமதி அளித்திருக்கலாமே ! அதைக் கூடச் செய்ய வில்லையே, பணமூட்டைகளைப் பார்த்துப் பல் இளிக்கும் இந்தக் காங்கிரஸ் தலைவர்கள் ! ஆனால் ஏட்டிலே மட்டும் எழுதி வைத்திருக்கிறார்கள் பழங்காலத் தொண்டை கவனித்துத்தான் அபேட்சகர்களைப் பொறுக்குவோம் என்று ! இதைவிடப் பெரிய பொய் வேறு என்ன இருக்கிறது இந்த உலகத்தில் ?"

இப்படிக் கேள்வி யெழுப்பும் பல காங்கிரஸ் தியாகிகளைக் காண முடிகிறது. தேபர் தலைமையில் இயங்கும் காங்கிரஸ் தீவிர மெம்பருக்கு வழங்கும் நிபந்தனைகளிலே ஒன்று ; அவர்கள் ஒழுங்காகக் கதர்த்துணி கட்ட வேண்டு மென்பது !

இதைப் படிக்கும்போது சிரிப்பு வருகிறதல்லவா தோழனே !

சுயமரியாதை இயக்கம் துவங்கிய முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு சுயமரியாதைத் தோழனுக்கு விதிக்கப்படும் நிபந்தனைகளில், நெற்றிக் குறி இடுதல் கூடாது என்பதும் ஒன்றாக இருந்தால் எவ்வளவு கேலிக்குரியதாக இருக்கும். அதைவிடப்பன்மடங்கு கேலிக்குரிய நிபந்தனையை தீவிர மெம்பர்களுக்கு விதிக்கிறார்கள், தேசியத் திருவாளர்கள்! கதர் கட்ட வேண்டுமாம்! இதிலிருந்து என்ன தெரிகிறது. காங்கிரசின் அரிச்சுவடி திட்டத்தைக் கூட—பாலர் பாடத்தைக் கூட-கட்டாயத்தின் பேரிலேயே தீவிர மெம்பர்கள் மீது திணிக்க வேண்டியிருக்கிறது! அதுவும் தேர்தல் என்னும் தின்பண்டத்தைக் காட்டி! நகர சபை யொன்றின் வரவேற்புக்குப் போயிருந்தேன்; அப்போது அந்த நகர சபைத் தலைவரை அறிமுகப்படுத்தி "இவர் காங்கிரசில் சேர்ந்து நகர சபைத் தலைவரானார்; ஆனால் கதரைக் கையாலும் தொடுவதில்லை !" யென்று ஒரு நண்பர் புகழ்ச்சியாகப் பேசினார். அந்தப் புதிய காங்கிரஸ்காரரின் மேனியை அழகான பட்டுத் துணியும், பள பளப்பான சூட்டும்தான் அலங்கரித்துக் கொண்டிருந்தது. அவர்களெல்லாம் கரைந்து வரும் காங்கிரசுக்குத் தேவைப் படுகிறார்கள். அதனால் "தீவிரம்" என்ற பொலிவு மிகுந்த அடை மொழி அவர்களது பெயருக்கு முன்னே மிக சுலபமாக இணைக்கப்படுகிறது !

உதை வாங்கியவன்-உதிரம் கொட்டியவன்-ஊரை விட்டே துரத்தப்பட்டவன் - உழைத்து உருமாறியவன்-இவர்கள் எல்லாம் அலட்சியப்படுத்தப்பட்டு, மாலை மரியாதைகளுக்கும் மதிப்புக்கும் கட்சியிலே 'தீவிர மெம்பரா'க சேர்கிற சந்தர்ப்ப வாதிகளை ஆதரிக்கிற எந்த ஒரு இயக்கமும் நீண்ட நாள் வாழ்ந்ததாக அரசியல் சரித்திரம் கிடையாது! அதற்கு விதிவிலக்கல்ல; காங்கிரஸ் மகா சபை!

இன்னொன்று பொன்முடி; தீவிர மெம்பர்கள், மதுபானம் முதலிய லாகிரி வஸ்துக்களை உபயோகிக்கக் கூடாதாம்!

திருமணமாகி ஒரு குழந்தையும் பெற்று விட்ட பெண்மணி தெருவிலே போய்க்கொண்டிருக்கிறாள். "என்னடி இது; தோளிலேயிருந்து சேலை நழுவி பூமியில் புரள்வது கூடவா தெரியவில்லை! சேலையை ஒழுங்காக உடுத்தடி !" என்று எச்சரிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டால், அந்தப் பெண்மணியின் பண்பு எத்தகையது என்பதை விளக்கவும் வேண்டுமா?

காந்தியாரின் இடைவிடாப் பிரச்சாரத்திற்குப் பிறகு - பல மாநிலங்களில் மதுவிலக்கு அமுலாக்கப்பட்ட பிறகு-மதுவருந்தித் தெருவிலே மயங்கிவிழும் 'ரௌடி'கள் சிறைக் கூண்டுகளில் தள்ளப்படும் நிலைமை நாட்டிலே ஏற்பட்ட பிறகு-காந்தியார் வளர்த்த காங்கிரசில் தீவிர மெம்பர்கள் ஆகிறவர்களுக்கு, "மதுவருந்தாதீர்!" என்று நிபந்தனை விதிக்க வேண்டியிருக்கிறதென்றால், தெருவிலே சேலையைப்பற்றிக் கவலையற்று செல்லும் பெண்மணிக்கும், இந்த தீவிர மெம்பர்களுக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது!

உடையிலே பெண்கள் கவனமாக இருக்க வேண்டுமென்பது, சிறு வயது முதல் இயற்கையாக வளருகிற பண்பு!-கதர் அணிதல் மதுவிலக்கல்-போன்ற போதனைகள் காங்கிரஸ்காரர்களுக்கு அத்தகையதே!

தேர்தல் நேரத்திலே அவைகளை நினைவுபடுத்தி-நிபந்தனையாகவும் ஆக்க வேண்டிய அவசியம் தேபர் காங்கிரசுக்கு ஏற்படுகிறதே யென எண்ணும்போது 'தீவிரம்' என்ற சொல்லுக்கு புதிய அகராதி தயாரிக்க வேண்டிய சூழ்நிலைதான் உருவாகிறது!

★ தொடர்ச்சி 10ம் பக்கம்.



## சிறு கதை

# வள்ளித் திருமணம் !

"இருண்டுகிடக்கும் பாழ் மண்டபத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் வௌவால்போல ஆகி விட்டது என் வாழ்க்கை ! சாகவும் முடியாமல், வாழவும் முடியாமல் நான் படும் இந்த வேதனையைவிட சித்ரவதை எவ்வளவோ மேல்; என் இதயத்தில் இரவு பகலாக அலைமோதிக் கொண்டிருக்கும் துயர அலைகளை, துன்பக் குமுறல்களை யாரிடம் எடுத்துச் சொல்வேன்; எங்கே செல்வேன் !" நெஞ்சம் சூன்ய வெளியாக வெறிச்சோடிக்கிடந்த போது, சுவற்றோடு நின்று இப்படி ஒருமுறை பேசிக்கொண்டான் பரமு !

வறுமைத் தேள் கொட்ட, இல்லாமை கழுத்தை நெரித்துப் பிடிக்க, இனத்தவரும் மற்றோரும் ஏறெடுத்துப் பார்க்காது அனாதையாக விடப்பட்டவனல்ல பரமு! பருவத்தின் எல்லைக் கோட்டில் நிற்கும் வாலிபன்; யாரோ தேடி வைத்த பெருநிதிக்கும்; பரவச வாழ்விற்கும் சொந்தக்காரன். ஆனாலும் அவன் உள்ளம் ஓயாது குமுறிக்கொண்டிக்கும் அலைகடலாக இருந்தது. அவன் நெஞ்சத்தை அரித்துக்கொண்டிருந்த ஏதோ ஒரு துயர சம்பவம் அவனைத் துக்க பிம்பமாக மாற்றி வைத்திருந்தது.

"தரும தாதா ! அவன் தலை எழுத்து இப்படியா இருக்கவேண்டும் பாவம் !"

"வாங்கிவந்த வரம், யாரைக் குறைசொல்ல முடியும் !"

"ஒதிய மரம்போல் ஒண்டிக் கட்டையாய் மூச்சு இருக்கும் வரை நடைபிணமாக இருந்து சாக வேண்டியதுதான் அவன் விதி !"

"உண்மையிலேயே பரிதாபகரமான நிலை, ஐயோ கடவுளே... இதைவிட அவனைச் சாகடித்திருக்கலாமே !"

அந்தப் பணக்கார இளைஞனின் பயங்கர நிலைக்காக பச்சாதாபப் பட்ட 'ஊர்வாய்' இப்படியெல்லாம் அசைந்து கொடுத்தது.

அந்த இளைஞனின் இன்ப வாழ்வைத் தட்டிப் பறித்த அந்த சோகப் பரிசு; அவனாகத் தேடிக் கொண்டதல்ல, இயற்கை அவனுக்குத் தந்த பயங்கர ஆயுள் தண்டனை! அவன் என்ன செய்வான் பாவம் ; எத்தனையோ முயற்சிகள்; எதுவும் கைகூடவில்லை, கைதேர்ந்த மருத்துவர்கள் வந்து பார்த்தனர். கடைசியில் உதட்டைப் பிதுக்கியபடியே வெளியேறியது தான் மிச்சம். எத்தனையோ இரவுகளைத் தூங்காமல், துன்பக் கண்ணீர் வடித்தபடியே கழித்திருக்கிறான். தூண்டிற் புழுபோல் துடிக்க வேண்டிய பலப்பல சூழ் நிலைகளெல்லாம் அவனைச் சந்தித்து விட்டன. எல்லாம் இருந்தும் என்ன பயன். சத்தற்ற சக்கை போலத்தான் அவன் சமுதாயத்திலே உலவ முடியும். அவன் வீதியிலே நடந்தால் எதிரே வருபவர்களின் முகங்கள் சுருங்கி வெறுப்பை வெளிப்படுத்திக்காட்டும் அவன் அருகே வர மற்றவர்களுக்கோ அருசை, அவன் ஒரு புறக்கணிக்கப்பட்ட ஜடமாக, சமுதாயத்தின் தேவையற்ற பொருளாகக் கருதப்பட்டான். தன் இதய வெப்பத்தை பெருமூச்சாக்கி சமுதாயத்திடம் இரக்கத்தை எதிர் பார்த்தான், பாவம்!

பணம்,பங்களா,பரவச வாழ்வு; அவன் விகார முகத்தை ஒரு முறை பார்த்து விட்டால் அத்தனையும் அதிலே அடிபட்டுப் போகும்! நரைத்தவனாக இருந்தாலும் தொலைகிறது. கை கால் முடமாக இருந்தாலும் பரவாயில்லை. அவன் அகோர முகத்தை எந்தப் பெண்தான் விரும்புவாள்! எப்படித்தான் அவனோடு வாழ சம்மதிப்பாள்.

★

அவன் பெண் கேட்ட இடமெல்லாம் 'பெண்ணா, உனக்கா? அடப்பாவி !'

'உன் லட்சணத்திற்கு பெண்டாட்டி ஒரு கேடா ?'

'போ, போ, மரக்கட்டையால் ஒரு பெண்ணுருவம் செய்து பாணிக்கிரகணம் செய்து கொள்'

இப்படிக் கேலியும் கிண்டலும் தான் அவனுக்குப் பதிலாகக் கிடைத்தது.

இதைவிட ஒரு இளைஞனுக்கு, பருவத்தின் உச்சாணிக் கொம்பிலே நிற்கும் முப்பதாண்டுகளைத் தொட்டுக் கொண்டிருக்கும் வாலிபனுக்கு, கொடுமையான தண்டனை என்ன இருக்க முடியும் ?

இனி அவன் வாழ்க்கை நாடகத்தில் வேஷப் பொருத்தமில்லாத நடிகன்; வசதியிருந்தும் வாழ்விற்கு ஒரு துணை தேடிக் கொள்ள முடியாத அவல நிலைக்கு ஆளானவன்; குஷ்டரோகிக்கும் ஒரு நளாயினி கிடைத்திருக்கிறாள் என்ற புராண நினைவு வேறு அவன் நெஞ்சிலே தீப்பொறிகளைத் தூவி அவனை வாட்டிக் கொண்டிருந்தது. வாழ்வதா ? சாவதா? என்ற கேள்விக் குறிகள் அவன் கண்முன்னால் தோன்றித் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. மேனுமினுக்கிகளும், மின்மினிப் பூச்சிகளும் வட்டமிடும் நகரத்து வாழ்க்கையிலேயே இப்பொழுதெல்லாம் அவனுக்கு கசப்பு ஏற்பட்டுவிட்டது. அவனுக்குத் தேவையானதெல்லாம், அமைதி; ஆடம்பரமும் ஆரவாரமும் இல்லாத நீண்ட அமைதி! அந்த அமைதியிலேதான் அவன் கொதிப்பேறியிருந்த நெஞ்சத்திற்கு குளிர்ச்சி கிடைக்கும் என்று எதிர்பார்த்தான். அந்த குளிர்ச்சிதேடிப் பறந்தது அவன் உள்ளம்.

நகரத்தை அடுத்து கொஞ்ச தூரத்தில் அவனுக்குச் சொந்தமான நிலம் இருந்தது. அதுவும் செத்துப்போன அவன் பாட்டன் அவனுக்குத் தேடி வைத்துச் சென்ற சொத்து. அந்த அமைதியான இடத்தில், சிங்கார மாளிகை ஒன்றை அமைத்துக் கொண்டான். பரபரப்பும், பட்டுப் பூச்சிகளும் நடமாடும் நகர வாழ்க்கைக்கே தலைமுழுக்குப் போட்டுவிட்டு அங்கே குடியேறி விட்டான் பரமு. துணைக்கு ஒரு வேலைக்காரனை மட்டும் அமைத்துக் கொண்டான்.

தன் முகத்தை தானே பார்த்துக் கொள்ள முடியாத நிலையில் அந்தத் தனிமையைத் தவிர வேறெங்கே அவனுக்கு சாந்தி கிடைக்கப் போகிறது.

தூங்கும் நேரம் போக மிச்சமிருக்கும் கொஞ்ச நேரத்தில் பண்ணையைச் சுற்றிப் பார்ப்பது தான் அவன் பொழுதுபோக்கு. அவன் வயக்காட்டை சுற்றிவரும் போதெல்லாம், காற்றால் தலை சாய்த்து அசைகின்ற பயிர்களைப் பார்ப்பான்; தன் முகத்தைப் பார்க்க சகிக்காமல்தான் அந்த பயிர்களும் தலைசாய்த்துக் கொள்ளுகின்றதோ என்றுகூட அந்த பரிதாபத்துக்குரியவனின் நெஞ்சம் தடுமாறும், நினைவு குழம்பும்!

இத்தகைய பயங்கர மனப்புயலில் அவன் சிக்கி சித்ரவதையடைந்து கொண்டிருந்த அந்த நாட்களில்தான் ஒருநாள்...!

வயல்களைச் சுற்றிப் பார்த்து விட்டு மாளிகைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான் பரமு !

வானம் கருத்து மேகங்கள் திரண்டெழுந்து ஒன்றோடு ஒன்று மோதி பயங்கரமாக முழங்கிக் கொண்டிருந்தது. பெருமழையும் புயற்காற்றும் அதைத் தொடர்ந்து மின்னல் பயமும், அவன் நெஞ்சை உலுக்கிற்று. வழக்கமாக துணைக் கழைத்து வரும் வேலைக்காரத் தாண்டவனையும் அன்று உடன் அழைத்துவரவில்லை. மழையில் நனைந்தபடியே வந்துகொண்டிருந்தான். அவன் உள்ளம் மட்டும் "வாழ்ந்துதான் என்ன பயன்; என்னை வாழவிடாத இயற்கை,என் இன்பத்தைப் பறித்துக்கொண்ட இயற்கை,என் உயிரையும் பறித்துக்கொள்ளட்டும்" என்று விரக்தியோடு முணு முணுத்துக் கொண்டே இருந்தது.

இயற்கையின பேயாட்டம் எல்லையைக் கடந்துகொண்டிருந்தது. அதற்கு மேலும் அவனால் நடக்க முடியவில்லை. பாதையின் ஓரத்திலே கீற்று வேய்ந்த ஒரு சிறு குடிசை; அதன் அருகே வந்து நின்றான். அவன் உடலெல்லாம் நனைந்துபோய் இருந்தது. சுவற்றோடு சுவராய் அந்த ஒட்டுத் திண்ணையில் உடலை இரு கரங்களாலும் இருக்கிப் பிடித்தபடியே வானத்தை அண்ணாந்து பார்த்து நின்றான்.

வானமே சரிந்து தரையோடு மோதியதுபோல ஒரு பேரிடி ! எங்கிருந்தோ ஒரு மின்னல் கீற்று; அதைத் தொடர்ந்து 'அய்யோ' என்ற அலறல்; கொட்டுகின்ற அந்தப் பெருமழையிலும் அந்த கீற்றுக் குடிசை தீப்பற்றி எரிந்தது. இத்தனையும் இமைமூடித் திறக்கும் இரண்டொரு விநாடிகளில்! அந்த குடிசையிலே மின்னல் பாய்வதற்குள் செவிகளை இறுக மூடியபடியே குப்புறத் தரையிலே முகம் புதைத்து விழுந்தான் ! பல நிமிடங்களுக்குப் பிறகுதான் அவன் சுய நினைவுபெற்று எழுந்தான்.

'வாழ்ந்துதான் என்ன பயன்' என்று அதுவரை சொல்லிக் கொண்டிருந்தவன், 'பிழைத்தேன்!' என்று சொல்லிக்கொண்டே எழுந்தான்.

குடிசை மின்னலின் தாக்குதலால் தீய்ந்து கருகிப்போய் இருப்பதைத் கண்டான். குடிசைக்குள்ளிருந்து வந்த ஒரு அழுகுரல் அவனை திடுக்கிடச் செய்தது ! வேகமாக உள்ளே நுழைந்தான்; வயதான ஒரு மனிதர் கோரமாக செத்துக் கிடப்பதையும் அருகே இரு கரங்களாலும் முகம் புதைத்தபடியே மூர்ச்சையாகிக் கிடக்கும் ஒரு கட்டிளங் குமரியையும் கண்டான ! அந்தக் கொடுமை நிறைந்த காட்சியை அதற்கு மேலும் அவனால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை, அந்த இளம் பெண்ணைத் தூக்கி உட்காரவைத்தான். அவள் முகத்தை மெல்ல உயர்த்தினான், கயல்போன்ற இரு கண்களும் இருக மூடிக்கொண்டிருந்தன. இந்த கோரத் திருவிளையாடலை முடித்துவிட்டு ஓய்ந்திருந்தது, பெருமழையும் புயற்காற்றும் !

சிலவினாடிகளில் நினைவுபெற்ற அந்த இளங்குமரி 'அப்பா, அப்பா' என்று முணுமுணுக்க ஆரம்பித்தாள். அப்பொழுது

★ தொடர்ச்சி 8-ம் பக்கம்

# வெள்ளிக் கிழமை

**9**

அந்தச் சிரிப்பு அமைதி நிரம்பிய உள்ளத்திலேயிருந்து எழுந்ததல்ல; கொந்தளிக்கும் கடலிலே எழும்பும் போலேகளை ஒத்திருந்தது. சிந்தாமணீ சிந்தாமணீ!! —என்று கூவினர். உரக்க சிரித்தார்! மகளே! மகளே!—எனக் கதறினர். அடி மானங்கெட்டவளே!—என்று சீறினர். நெறிகெட்ட பெண்ணே! நேர்மையற்ற பேதாய்! நீலி! காளி!-என்றெல்லாம் உளறினர். சிவநேசருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று முடிவுகட்ட இதைவிட வேறென்ன காரணங்கள் வேண்டும் சிவகாமி எதிரே விழுந்து தடுத்துங்கூட அவளைத் தள்ளிவிட்டு சிவநேசர் தெருவுக்கு ஓட ஆரம்பித்தார்.

ஊர் மக்கள் கூடினர். சிவநேசர் அவர்களையெல்லாம் வெறிகொண்ட வார்த்தைகளால் தாக்கத் துவங்கினர். அவரை வலுக்கட்டாயமாக அங்கிருந்து இழுத்துச்சென்று வீட்டிலே போட்டுப் பூட்டிவைத்தார்கள் ஊர் மக்கள். சிவகாமியின் மனம் மரத்துப் போய்விட்டது. அசைவற்றுப் போனுள் இனி என்ன இருக்கிறது நடப்பதற்கு; எல்லாம் நடந்துவிட்டது என்ற குமுறல் அவள் நெஞ்சிலே மேலோங்கி யெழுந்தது அறையிலே அடைக்கப்பட்ட சிவநேசர் கூச்சல் போட்டவாறு கதவைத் தட்டி ரகளை செய்துகொண்டிருந்தார். சிந்தாமணியைப் பற்றி ஊரிலே பலவாறு பேச்சு ஆரம்பமாயிற்று! அவளது தோழிகள் அவளுக்காக வாதாடித் தோற்ருர்கள்.

"பார்ப்பதற்கு பரமசாதுமாதிரி இருந்தாளே; அவளா இப்படி பரத்தை வாழ்வு நடத்தியிருக்கிருள்" என்று அதிசயப் பட்டனர் பலர்.

"சாதுக்களைத்தானய்யா இந்தக் காலத்தில் நம்பக்கூடாது! அதற்கு சரியான உதாரணம் இநதச் சிந்தாமணி!" இப்படி நிச்சயப் படுத்தினர் பலர்!

"பாவம்; சிவநேசர் கொஞ்சம் மானஸ்தன்! அவன் பெண்டாட்டி சிவகாமிக்குத் தெரியாமல் எதுவும் நடந்திருக்காது. சிந்தாமணி கெட்டதற்கே அவள்தான் காரணமாயிருந்திருப்பாள்!" இப்படி அபாண்டம் சுமத்தினர் சில அவசரக்காரர்கள்!

"பெற்ற குழந்தையைத் தூக்கிக்கொண்டு எங்குதான் ஓடியிருப்பாள்! பலே கைகாரியம்மா அவள்! பிரசவம் ஆன உடம்பு! பச்சை உடம்பு! அதோடு ஓடியிருக்கிருளே ஓடுகாலி!' என்று மூக்கில் விரல் வைத்தவாறும், முகவாய்க்கட்டையில் கைவைத்தவாறும் பெண்கள் மகாநாடு அதிசயத்தில் ஆழ்ந்தது!

"என்னதான் சொல்லுங்கள், எங்கள் சிந்தாமணி — அப்பழுக்கற்ற தங்கம்! அவளைப்பற்றி அணுவளவு சந்தேகப்பட்டுப் பேசினுலும் அவர்கள் நாக்கு அழுகிவிடும்!" என்று சாபங் கொடுத்தாள் ஆண்டாள்!

"நாக்கு என்ன நாரத்தம் பழமா! அழுகிப் போக! போடி போக்கிரி உன் வேலையைப் பார்த்துக்கொண்டு!" என்று அவளை அடக்கினுள் ஊர்ப்பெரிய மனுஷி ஒருத்தி!

"விஷயம் வெளிச்சமாகித்தானே மாப்பிள்ளை வீட்டார் மனமுடைந்து திரும்பி யிருக்கிருர்கள்" என்று தங்களுடைய அரைகுறைச் சந்தேகங்களையும் போக்கிக் கொண்டார்கள் திடீர் முடிவுக்காரர்கள் சிலர்!

எப்படியோ சிந்தாமணிக்குக் களங்கம் கற்பிக்கப்பட்டு அது ஊர் முழுவதும் பரவி விட்டது. சிவநேசர் வீட்டை மிக அலட்சியத்தோடு பார்க்க முற்பட்டார்கள் அவரது சொந்தக்காரர்கள். ஒருவனுக்குக் கஷ்டம் வந்து விட்டால் முதலில் சந்தோஷப் படுவதும் சங்கடப்படுவதுபோல் காட்டிக் கொண்டு மேலும் தொல்லைகளை உண்டாக்குவதும் சொந்தக்காராகத்தானே இருப்பார்கள்.

வேதபுரத்திலே இருப்பவர்கள் மட்டுமென்ன; விதிவிலக்கா? சிவநேசன் சரியானபடி சிக்கிக் கொண்டான் பெங்களூர் சம்பந்தமாமே பெங்களூர் சம்பந்தம்! பெரிய இடத்து சம்பந்தம்! எல்லாம் தவிடு பொடியாகிவிட்டது! என்று தங்களுக்குத் தாங்களே பூரிப்படைந்தார்கள். அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைகளாயுள்ள உறவினர்கள்! சிந்தாமணியின் தோழிகளோ சிந்தை கலங்கி நின்றனர். தங்கள் ஆருயிர்த தோழிக்கு இப்படி ஒரு அவமானம் வந்துற்றதே யென்று ஏங்கித் தவித்தனர்; அவர்களாலும் இந்தப் புதிரைப் புரிந்து கொள்ள இயலவில்லை. ஊரார் பேசப் பேச அவர்களிலேயேபிளவு ஏற்பட்டது.

"ஒரு வேளை நமக்கும் தெரியாத உண்மையாக இருக்குமோ?" என்ற சந்தேகம் துளிர்விடத் தொடங்கியது, தோழிகள் சிலருக்கு! எந்த மணமும் இல்லாத இடத்திலே "எலுமிச்சம்பழ வாடை வீசுகிறது" என்று மந்திரவாதி நாலு முறை நம்புவது போல் சொல்வானேயானுல் நமக்குக்கூட அந்த வாடை வீசுவது போல் தோன்றலாம். பொய்யைப் பத்து முறை வலியுறுத்திச் சொன்னுல் மெய்யாகத் தோற்றமெடுக்கும் என்பார்கள். அப்படிச் சொல்லித்தானே "கடவுள்" என்ற சொல்லை வாழ்க்கை அகராதியிலே பெரிய எழுத்துக்களில் அச்சடித்து வைத்திருக்கிருர்கள்! உலக மக்களை ஏமாற்றும் பொய்மைகளே உண்மைகளாக உருவெடுக்க முடியும் என்கிற போது சிந்தாமணியைப் பற்றிய செய்திகள் தீப்போலப் பரவி அப்படித் தானிருக்க முடியுமென்று தீர்மானமாக ஆக்கப்படுவது பெரிய காரியமா என்ன? புனிதமானவர்களையும் புகழடைந்தவர்களையும் பற்றி பொல்லாங்குபேசும் பொருமைக்காரர்கள் சூழ்ந்திருக்கிற இந்த உலகத்தில் சிந்தாமணியைப் போன்ற செந்தாமரைகளை, 'எரிச்சல் எருமைகள்' மிதிக்காமல் விடுவார்களா? பெண்கள் வட்டாரத்தில் ஒரு பகுதி.

சிந்தாமணியைப் பற்றிய கேலிக் கணைகளைப் பொழிந்த வண்ண மிருந்தது. அவர்களில் சிலர் 'கற்பு' எனும் மூன்றெழுத்துக்கு அர்த்தம் தெரியாதவர்கள்! தன்னிடத்தில் மண்டிக் கிடக்கும் குற்றங் குறைகளைத் திரும்பிப் பாராமல் பிறரிடம் இல்லாத குற்றங்களை சிருஷ்டித்துக் கொண்டு சிரித்து மகிழ்வதுதானே இந்த விசித்திர பூமியில் விளையாட்டாக இருக்கிறது! அந்த வேதனையான விளையாட்டுக்குப் பரிதாபத்திற்குரிய பாவை சிந்தாமணி பலியானுள்;

சிவநேசரை வீட்டிலே அடைத்துவிட்டு, சிவகாமிக்கு ஆறுதல் கூறிவிட்டு ஊராரும் தெருவாரும் தங்கள் கடமைகளைக் கவனிக்கப் புறப்பட்டார்கள். சிவகாமி என்ன செய்வதென்று தோன்ருமல் உட்கார்ந்திருந்தாள். கணவனிடம் யோசனைகள் கேட்கவோ வழியில்லை. அவர் கரடிபோல் கத்திக்கொண்டு கிடக்கிருர். சிந்தாமணி போன மார்க்கமோ தெரியவில்லை. தெருவிலேயுள்ளவர்களோ, தெளிவான யோசனை எதுவும் தெரிவிக்கவில்லை. ஆகட்டும் காலைக்குப் பார்க்கலாம் என்று கூறிப் பொறுப்பைக் கழித்துக்கொண்டு போய்விட்டார்கள். சிந்தாமணியைப் பற்றி ஊரே சந்தேகப்பட்டுப் பேசுகிறது. அவளோடு சேர்ந்திருந்த தோழிகளும் குழப்பத்தில் மூழ்கிவிட்டார்கள். சிவகாமி தனித்து விடப்பட்டிருக்கிருள். அவளால் எதைத் தீர்மானிக்க முடியும்! தாயொருத்திக்குத்தான் தன் செல்வியைப் பற்றிய ஐயம் எழவேயில்லை! அவள் தூய ஜோதி யென்று சிவகாமி மட்டுமே குழப்பமின்றி உணர்ந்திருந்தாள். மகளைப் பார்த்து விபரமெதுவும் அறிய முடியாதபடி போய்விட்டதே — அவள் எங்கு போயிருப்பாள்—ஒருவேளை சேதி கேள்விப்பட்டு வேதனை தாங்காமல் எங்காவது ஓடிப்போய்...... அய்யோ! அதை அவளால் கற்பனை செய்யவே முடியவில்லை!

மணி ஒன்பது அடித்தது— இருள் சூழ்ந்த வேதபுரத்தில் கண் கட்டப்பட்ட நிலையிலே தத்தளித்துக் கொண்டிருந்தாள் சிவகாமி. வாயிற்புரத்தில் யாரோ வரும் சப்தம் கேட்டது. "சிந்தாமணி!" என்று அலறியடித்துக் கொண்டு ஓடினுள் சிவகாமி! அவள் அலறியதைக் கேட்ட சிவநேசர், அறைக்குள்ளிருந்தபடியே "சிந்தாமணியா? அந்த சீரழிந்தவளா?" என்று கூச்சலிட்டு உளற ஆரம்பித்தார். தெருவுக்கு ஓடிய சிவகாமி திகைத்து நின்ருள். எதிரே டைகர் நின்று கொண்டிருந்தான்.

"என்ன வீடு ஒரே ரகளைப் படுகிறது! என்ன அத்தை சமாச்சாரம்! மாமா எங்கே?" என்று கேட்டான் டைகர்!

★ மு. கருணாநிதி ★



"மாமா! இதோ இருக்கிறேன்! மானங்கெட்ட மாமன இதோ இருக்கிறேன். கதவைத் திறவீர்! கதவைத் திறவீர் இல்லாவிட்டால் இந்த ஊரையே அழித்தவிடுவேன! நான தான் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்! மானேந்தி! மழுவேந்தி! தலையிலே கங்கையேந்தி! பக்கத்திலே பார்வதி யேந்தி! நான்தான பரமசிவன! அடே ராக்ஷசா! உடனே கதவைத் திறக்கிருயா? அல்லது என் காளை வாகனத்தை விட்டு உன்னை முட்டச் சொல்லட்டுமா? அடி பார்வதி ஹே; சிவகாமி! கதவைத் திற! இல்லாவிட்டால் நான் தேவாரப் பதிகம் பாடி திருமறைக் காட்டில் கதவு திறந்ததுபோல் திறந்திடுவேன்" என்று கடல்மடை திறந்தாற்போல பேச ஆரம்பித்தார் சிவநேசர். பித்து அதிகமாகிறது என்பதை உணர்ந்த சிவகாமி, தலையில் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டு அழத் தொடங்கினுள்,

"என்ன அத்தை இது! கொஞ்சங்கூட புத்தி கிடையாது உங்களுக்கு! இப்போது என்ன வந்துவிட்டத? ஏன் இப்படித் தாண்டவமாடுகிறீர்கள்!" எனருன் டைகர்.

"இன்னும் என்னப்பா வர வேண்டும்? குடும்பத்து மானமே போனபிறகு மிச்சம் என்ன இருக்கிறது! என் உயிர்தான் இருக்கிறது! அதையும் ஆந்தப் பாழுங் கடவுள் பறித்துக் கொண்டுபோக மாட்டேன் எனகிருனே!"

சிவகாமி மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தாள்.

"கவலைப்படாதே சிவகாமி! இதோ நமது எமனை அனுப்புகிறேன் அவனுடு தேவலோகம் வந்து சேருவாயாக! ஓடி வா! ஓடி வா!" என்று கத்தினர் சிவநேசர்!

"இதை விடக் கொடுமை வேறு என்னப்பா வேண்டும்; அதுவும் இந்த வயதில் எனக்கு!"

சிவகாமி ஒப்பாரி மீண்டும் ஆரம்பமாயிற்று.

"பயப்படாதீர்கள் அத்தை! மாமாவுக்கு உடம்பு குணமாக நான் ஐவாப்தாரி! சிந்தாமணியைக் கண்டு பிடிப்பதும் என் பொறுப்பு."

"டைகர்! எங்கள் விதியை யாராலும் மாற்ற முடியாது. நீ உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ!" என்று அழுகை ஆத்திரத்தோடு சிவகாமி கூறினுள்.

"அதுதான் சரி! அதுதான் சரி! விதியை மாற்ற ஈசனுலும் முடியாது! சிந்தாமணி! உன் விதியை என்னுல் மாற்ற முடிந்ததா? நீ கேடு கெட்டவளாக மாறவேண்டுமென்று விதி இருந்திருக்கிறது! நீ கல்யாணமாவதற்குள் கர்ப்பமாக வேண்டுமென்று விதி இருந்திருக்கிறது! விதியே விதியே விதியே!...என் தலை விதியே! என் தலை விதியே! காமீ சத்யபாமா! கதவைத் திறவாய்! திறவாய்!!" சிவநேசரின் கூச்சல் அதிகமாயிற்று. டைகர், சிவகாமியிடம் மிகப் பணிவோடும், குழைவோடும் பேச்சை தொடர்ந்தான்.

"அத்தே! என்னைப்பற்றி நீங்களும் மாமாவும் போட்டிருக்கிற கணக்கு தவறு! நான் நல்லவனுக்கு நல்லவன்! கெட்டவனுக்குக் கெட்டவன்! நீங்கள் என்னை அலட்சியப் படுத்தினுலும் நான் உங்களுக்கு வந்த கஷ்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன, சத்தியமாகச் சொல்லுகிறேன்; சிந்தாமணியைக் கொண்டு வந்து உங்கள் கையில் ஒப்புவிக்க வேண்டியது என் பொறுப்பு! என் கடமை! நீங்கள் சொன்னுலும் சொல்லா விட்டாலும் அது என்ன வேலை!"

"சிந்தாமணி திரும்பி வருவதும் ஒன்றுதான் அவள் வராமல் அங்கேயே சாவதும் ஒன்றுதான்! அவளைப்பற்றி ஊர் முடிவு கட்டி விட்டது! அவமானச் சின்னம் என்று அபிப்பிராயம் தெரிவித்து விட்டது! என் கண்மணி திரும்பி வந்து காலமெல்லாம் கண்ணீருங் கம்பலையுமாக சன்னி கழியாத சுமையாக இருப்பதைவிட அவள் செத்து விடுவது மேல்!"

இதைச் சொல்லிபபடி தலையை சுவற்றில் சாய்த்தவாறு கண்ணீர் உகுத்தாள் சிவகாமி.

"சிந்தாமணிக்குக் களங்கம்! அதற்காகத்தானே பயப்படுகிறீர்கள் அத்தை! யாரும் அவளை இனிமேல் கல்யாணம் செய்து கொள்ள மாட்டார்களே என்று தானே கவலைப் படுகிறீர்கள்! இதைவிட ஆயிரம் அபாண்டங்களை-பதினுயிரம் பழிகளை-அவள் மேல் சுமத்தினுலும் சரி; நான் தயாராயிருக்கிறேன் அவளைக் கல்யாணம் செய்துகொள்ள! என்ன சொல்கிறீர்கள்!" என்ருன் டைகர், நல்லவன்போல நடித்து, உத்தமன்போல பணிந்து நின்று!

சிவகாமி, அவனை உற்று நோக்கினுள்! ஆத்திரம் அவள் கண்களில் தோன்றியது! உதடுகள் துடித்தன அவளுக்கு!

"ஏ! ராமகிருஷ்ணு! எல்லாம் உன் சூழ்ச்சிதானு! சிந்தாமணியைக் கல்யாணம் செய்து கொள்வதற்காக நீ செய்த ஏற்பாடுகள் தானு இவையெல்லாம்?" என்று சினம் பொங்கி வழியச் சீறினுள் சிவகாமி!

"என்ன அத்தை! உங்களுக்கும் மாமாமதிரி ஏதாவது பிடித்து விட்டதா என்ன? உண்மையிலேயே சொல்லுங்கள் — சிந்தாமணி களங்கமற்றவள் என்று நீங்கள் நம்புகிறீர்களா இல்லையா?" டைகர் கேட்டான் இப்படி!

"என் மகள் கண்ணகி தேவியடா—கண்ணகி தேவி!" என்று கத்தினுள் சிவகாமி.

"அப்படியானுல், அந்தக் கண்ணகி தேவி, உயிரோடு திரும்பி வந்து, உங்களை அம்மா என்று அழைப்பதை ஏன் மறுக்கிறீர்கள்?"

"யார் மறுத்தது? என் மாணிக்கம், ஒரு முறை முக தரிசனம் காட்டினுலும் போதுமே!"

தாய்மை உணர்ச்சி அணை உடைத்து எழுந்தது சிவகாமிக்கு! அவள்தான் முதலில் சொன்னுள்; ஊரார் பழிக்கு ஆளான சிந்தாமணி திரும்பி வருவதைவிட சாவது மேல் என்று! இப்போது அவள்தான் பேசுகிருள், முகதரிசனம் கிடைத்தாலும் போதுமென்று!

முன்னது, மான உணர்வுக்குக் கட்டுப்பட்ட மனித உணர்ச்சி! பின்னர் பீறிட்டு எழுந்தது, அதனினும் மேம்பட்ட தாய்மை உணர்ச்சி! தாய்மை உணர்ச்சியைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொள்ளத் திட்டமிட்டான், டைகர் ராமகிருஷ்ணன்!

"சிந்தாமணி எங்கும் போய் விடவில்லை! என்னுல் அவளை இங்கு கொண்டுவர முடியும்! ஆனுல் ஒரு நிபந்தனை — அவளை எனக்குத் திருமணம் செய்து வைப்பதாக உறுதி கூற வேண்டும்!"

"திருமணமே கிடையாது! சிந்தாமணிக்குத் திருமணமே கிடையாது! அவள் ஒரு மணிமேகலை! துறவி! சந்நியாசி! புத்த பிக்ஷு! அவளுக்குத் திருமணம் கிடையாது! இது என்னுடைய தீர்மானம்! அவள் ஒரு பிரமச்சாரிணி! இல்லை இல்லை; கன்னி கழியாமல் பிள்ளை பெற்றவள்! அவள்தான் அசல் குந்திதேவி! ஏ, பாண்டு மகாராஜனே! அவளைக் கல்யாணம் செய்துதர முடியாது! ஓடிவிடு! ஓடிவிடு!" என்று முழக்கமிட்டார் முற்றிக்கொண்டேயிருக்கும் பித்த முதிர்ச்சியால் சிவநேசர்!

"என்னத்தைச் சொல்கிறீர்கள்! சிந்தாமணி திரும்பி வர வேண்டுமல்லவா?"

"ஆமாம்! நிச்சயமாக!"

"அப்படியானுல் திருமணம்?"

"திருமணம்??" சிவகாமி பெருமூச்சு விட்டாள்!

"அத்தே! முடிவாகச் சொல்லுங்கள்! நீங்கள் உறுதி கொடுத்தால் நாலுபேரறிய நாகரீகமான முறையில் திருமணம் நடக்கும். இல்லாவிட்டால் எங்களுக்குத் திருமணமான சேதியைக் கேள்விப்படுவீர்கள்!"

"என்னப்பா பயமுறுத்துகிருய்! சிந்தாமணியை நீதான் ஒளித்து வைத்திருக்கிருயா? இது என்ன காட்டு ராஜா காலம் என்று நினைத்துக் கொண்டாய்! போலீஸ் இலாக்கா இருப்பதை மறந்து விடாதே!"

"இருக்கலாம், போலீஸ் இலாகா வந்தால் உங்கள் மகளின் பிணத்தைத்தான் கொண்டு வரும்! ஞாபகம் இருக்கட்டும்!" அதைக்கேட்ட சிவகாமி திடுக்கிட்டாள்.

"இப்போது நீ என்னதான் சொல்லுகிருய்?" என்று கெஞ்சுந்தோரணையில் கேட்டாள்.

"என்ன சொல்லுகிறேன்! சிந்தாமணியை அழைத்து வருகிறேன். அவளை எனக்குத் திருமணம் செய்து வைக்க சம்மதிக்க வேண்டுமென்கிறேன்."

"சரி ஆகட்டும்! அவளை அழைத்துக் கொண்டுவா!" என்ருள் சிவகாமி!

"இப்படிச்சொன்னுல் போதாது அத்தை! உங்கள் குல தெய்வத்துக்கு நேராக சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்,"

"சத்தியமா?"

"பிறகென்ன; ஏமாற்றி விடலாம் பயலை யென்று எண்ணுகிறீர்களா? அதெல்லாம் முடியாது! குலதெய்வத்துக்கு நேராக ஆணையிட்டு சம்மதம் தர வேண்டும்!",

சிவகாமி யோசித்தாள்! அவள் தாயுள்ளத்திலே போரும், புயலும் மூண்டது!

சிந்தாமணியை இழந்துவிட அவள் துணிய முடியுமா? அதே நேரத்தில் டைகர் ராமகிருஷ்ணுவை அவளுக்குத் துணைவனக ஆக்கிடத்தான சமமதிக்க முடியுமா? இப்போது சிவகாமிக்கு இருந்த ஆசை யெல்லாம், சிந்தாமணியை ஒரு முறை சந்தித்து அவள்மீது சுமத்தப்பட்ட பழியைப் பற்றிய விபரம் அறிய வேண்டுமென்பததான்! தன் அன்பு மகளைச் சூழ்ந்திருக்கும் அவதூறு இருளை எப்படியாவது அகற்றிவிட வேண்டும் எனத் துடித்தாள் அவள். சிந்தாமணி திரும்பி வந்தால் அந்தப் பழியை ஊரார் மனதிலேயிருந்து அகற்றி விடலாம் என்று நம்பினுள் அவள்! இந்த நிகழ்ச்சிகளுக் கெல்லாம் டைகர்தான காரணமா யிருப்பானே என்ற சந்தேகமும் எழுந்தது அவளுக்கு! டைகருக்கு அவளைத் தருவதாக வாக்களித்துவிட்டால், அவன் அவள் மீது—தானே வீண் பழியை சுமத்தியதாக ஊர் மக்களிடம் ஒப்புக் கொண்டு தன் மகளைப் புனிதவதியாக மாற்றி விடுவான். அவள்மீது படிந்த மாசு விலகிவிடும்! வீண் அபவாதம் அழிந்துவிடும்' என எண்ணினுள். டைகரோடு சிந்தாமணிவாழ்க்கை நடத்துவதை சகித்துக் கொள்ளலாம். ஆனுல், அவள் களங்கமுற்றவள் என்ற பெயரை எப்படி சகித்துக் கொள்வது? அந்தப் பெயர் மறைய வேண்டுமானுல், டைகருக்கு அவளைத் திருமணம் செய்து கொடுப்பதுதான் சரி, என்ற முடிவுக்கு வந்தாள் சிவகாமி! தாயுள்ளம் அப்படித்தான் தீர்மானிக்க முடியும்!

குலதெய்வத்தின முன்னே சத்தியம் செய்து கொடுக்க சிவகாமி தயாரானுள். சிவநேசரோ கதவைத்தட்டி உடைத்துக் கொண்டு உரக்கக் கூவிக் கொண்டிருந்தார்.

வீடு அல்லோல கல்லோலப் படுவதும் ஊரார் நகைத்துப் பரிகசிப்பதும் — சிந்தாமணி திரும்பி வந்தால் சரியாகிவிடும் என்று அவள் பூரணமாக நம்பிவிட்டாள். அதோடு, டைகர் தன் வீட்டு மாப்பிள்ளையாகி விட்டால், ஊர்வாய் அச்சத்தால் அடைத்து விடும் என்றும் கருதினுள்.

"மகள் மாசற்றவள்" என்று நிரூபிக்கப் பட்டு விட்டால் போதும் சிவகாமிக்கு!

அதனுல் பழிபாவம் பாரங்களையெல்லாம் தெய்வத்தின் மீது போட்டு விட்டு, டைகரின் நிபந்தனைக்குக் கட்டுப்பட்டாள்.

டைகர், குல தெய்வத்திற்கு குத்துவிளக்கு ஏற்றி வைத்தான். குங்குமப் பொட்டு வைத்தான். "ம்! உறுதி கொடுக்கலாம். அத்தை!" என்ருன்.

சிவகாமியும் குலதெய்வத்திற்கு நேராக நின்று "எங்கள் குல தெய்வத்தின் மேல் ஆணை! சத்தியமாக, உனக்கு சிந்தாமணியைக் கல்யாணம் செய்துகொடுக்கிறேன்!" என்று உறுதிமொழி தந்தாள்.

அதைக்கேட்ட டைகர், "சபாஷ் அத்தை சபாஷ்! இனிமேல் சிந்தாமணி வருவாள்! உங்கள் துன்பமெல்லாம் தொலையும்!" என்று மகிழ்ச்சியோடு கூறிக் கொண்டே வீட்டை விட்டு வெளியேறினுன்.

(தொடரும்

One side page dark

## வள்ளித்...

★ 5-ம் பக்கத் தொடர்ச்சி

தான் அருகிலே செத்துக் கிடப்பது அவள் தந்தை என்பதை அறிந்துகொண்டான் பரமு! கண்கள் இருண்டுபோன அதிர்ச்சியோடு, தந்தை வேறு செத்துப் போனார் என்ற செய்தியை அவள் தாங்கிக்கொள்ள மாட்டாள் என்பதறிந்து, அவளை அன்போடு அணைத்து எழுப்பி தன்னோடு வரும்படி யழைத்தான்; அவள் தோள்களைத் தன் கரங்களால் பற்றியபடியே தன் மாளிகை நோக்கி நடந்தான்,

''திக்கற்றவர்களை தெய்வம் காப்பாற்றுவிட்டாலும்; ஏழைக்கு இரக்கம் காட்டும் நீங்கள் யாரய்யா?'' அன்போடு கேட்டாள் அந்த கண்ணிழந்த கட்டழகி!

'பேசாமல் என்னோடு வா; எல்லாவற்றையும் பிறகு சொல்லுகிறேன்' என்று கூறிவிட்டு அவளை தன் வீட்டிற்கு அழைத்து வந்தான் பரமு;

தன் எஜமானரின் வருகைக்காக வாயிலிலே காத்துக் கொண்டிருந்த தாண்டவன் ஓடோடியும் வந்து உபசரித்தான். அந்த இளம் பெண்ணிற்கு இயற்கை இழைத்துவிட்ட கொடுமையைக் கண்டு; 'அட கடவுளே; கண்ணில்லையா பாவி உனக்கு' என்று சபித்தான் அந்த ஏழைக்கு இரங்கும் ஏழை! பரமு நடந்ததை அவனிடம் விளக்கினான்: தாண்டவனை யனுப்பி நகரத்திலிருந்து டாக்டரை அழைத்து வந்தான்; கண்களுக்கு கட்டு போட்டு அவளை ஓய்வெடுத்துக் கொள்ளும்படி சொல்லிச் சென்றார் டாக்டர்'

நாட்கள் உருண்டன; கண் இருண்டுவிட்டதையும்; தந்தை மாண்டதையும்கூட; பரமுவின் அன்பணைப்பிலே மறந்தே போனாள் வள்ளி; அவள் பெயர் அதுதான்!

கூனிப்போன குடிசையிலே வயிற்றோடு போராடிக் கொண்டிருந்த வள்ளி; தன் கண்களைப் பறித்துக் கொண்டுதான; இந்த பரவச வாழ்வை தனக்களிக்க வேண்டும் இந்தப் பாழும் கடவுள் என்று குமுறினாள். தனக்குக் கருணை காட்டவந்த நடமாடும் தெய்வம் பரமு; என்றெண்ணினாள். அந்த அன்புத் திருவுருவத்தின்; 'அருளொழுகும்' முகத்தைக்கூடப் பார்க்கக் கொடுத்து வைக்காமல் போய் விட்டதே என்று கலங்கினாள்.

ஒருநாள் இரவு; விழி மூடிக் கொண்டிருக்கும் சிற்பம்போல்; கட்டழகு ஒளி வீச கட்டிலிலே படுத்துக் கொண்டிருந்தாள் வள்ளி. அமைதியாகத் தூங்கிக் கொண்டிருக்கும் அவள் முகத்தில் சாரளத்தின் வழியாக புகுந்துவந்த நிலவொளி தவழ்ந்திருந்தது. அகலத்திறந்த கண்களால் அந்தப் பெண்ணோவியத்தை விழுங்குவதுபோல நெடு நேரம் பார்த்துக் கொண்டே இருந்தான் பரமு. அவன் உள்ளத்திலே ஏதேதோ விசித்திர நினைவுகள் எழுந்தெழுந்து அடங்கிக் கொண்டிருந்தன; அந்த இடத்தை விட்டு வேகமாகத் தன் அறைக்கு வந்தான்.

'இவன் லட்சணத்திற்கு பெண் தரவேண்டுமாம் பெண்!'

'போ! போ! ஏதாவது மரக் கட்டையை மணந்து கொள்!'

''ஒதிய மரம்போல் வாழ்ந்து சாக வேண்டியதுதான் நீ!''

அன்று அவன் திருமணம் செய்துகொள்ள நினைத்தபோது சமுதாயம் வீசிய கிண்டல் கணைகள் அவன் செவிகளை வந்து மோதிற்று; அவன் இதயத்தின் ஆழத்திலிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது: ஏதோ முடிவிற்கு வந்தவனாய் உறங்கிவிட்டான்.

அடுத்தநாள்; 'பரமு, வெள்ளி' திருமணச் செய்தியை சுமந்தபடி நாளேடுகள் விற்பனையாகிக் கொண்டிருந்தன.

வள்ளி அடைந்த மகிழ்ச்சிக்கோ அளவே இல்லை; தன் இருண்ட வாழ்விற்கு ஒளி கூட்ட வந்த உத்தமன் பரமு என்றெண்ணிப் பூரித்தாள்.

''இந்த விகார ரூபனுக்கும் ஒரு குருடி பிறந்துதானே இருக்கிறாள்; நல்ல உலகமடா இது!''

இப்படிப் பேசி, தன் 'மேதா விலாசத்'தைக் காட்டிக் கொள்ளத் தவறவில்லை சமுதாயம்!

★

ஒருநாள் காலை; அன்று வெளி வந்த ஒரு பத்திரிகையை கையிலே எடுத்துக் கொண்டு அவசர அவசரமாக வள்ளியிடம் வந்தான் தாண்டவன்; அறையிலே சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்த வள்ளி; காலடி ஓசையிலேயே; வருவது யார் என்று அறிந்துகொண்டு 'என்ன தாண்டவா!' என்றாள்.

'இன்று பத்திரிகையிலே ஒரு புது விளம்பரம் வந்திருக்கம்மா; அமெரிக்காவிலே இருந்து ஒரு புதிய டாக்டர் வந்திருக்காராம்; கண் நிபுணராம்; மின்னலால் தாக்குண்ட பழுதடைந்த கண்களைக்கூட குணப்படுத்தி விடுவாராம்; இதைத்தான் உங்களிடம் சொல்ல வந்தேன்,

''உண்மையாகவா தாண்டவா; என் இருண்டுபோன கண்களுக்கு ஒளி தருவாரா!''

''அந்த டாக்டர் வெள்ளைக்காரராம்; அதனால்தான் எனக்கும் நம்பிக்கை இருக்கிறது; எதற்கும் அவரிடம் போய் பார்க்கலாமே!''

''அவரிடம் சொல்லிவிட்டு செய்வோமே''

''கூடாதம்மா, கண்டவர்களிடம் கண்ணைக் காட்டி இருக்கின்ற கண்ணையும் பாழ்படுத்த வேண்டாம் என்று வழக்கம்போல சொல்லித் தடுத்துவிடுவார்''

''சரி தாண்டவா; நாளை அவர் பண்ணைக்குப் போய் திரும்புவதற்குள், நாம் டாக்டரிடம் போய் வந்துவிடலாமே!

'சரியம்மா' என்று தலையசைத்துவிட்டு சென்றான் தாண்டவன்.

★

மறுநாள் வள்ளியின் கண்களைப் பறிசோதித்தார். டாக்டர்; அதிர்ச்சியால் ஏற்பட்ட கோளாறுதான் என்றும் மேலும் அதிகநாள் ஆகவில்லை என்றும், விரைவில் குணப்படுத்த முடியும் என்றும்; அந்த அமெரிக்க கண் வைத்தியர் வள்ளியிடம் உறுதி கூறி; அன்றே முதல் நாள் சிகிச்சையை ஆரம்பித்து விட்டார்.

எப்படியோ பரமுவுக்குத் தெரியாமலே பதினைந்து நாட்களை ஓட்டிவிட்டாள் வள்ளி; ஒருநாள் இரவு வள்ளியின் கண்களில் புதிதாகக் கட்டு இருப்பதைப் பார்த்துவிட்டு; பரமு துடித்தே போனான்.

'என்ன வள்ளி இது!' ஆச்சரியத்தோடு கேட்டான் அவன்.

அதற்கு மேலும் மறைக்க விரும்பவில்லை; நடந்த எல்லாவற்றையும் பரமுவிடம் விளக்கினாள் வள்ளி.

'அன்பரே; கண் பெறவேண்டும் என்பதுகூட அல்ல என் ஆசை. என் கருணைக் கடலே! என்னிடம் இவ்வளவு அன்பு பொழியும் தங்கள் திருமுகத்தை என் ஆயுளில் ஒரு முறையாவது பார்த்து மகிழ வேண்டும் என்ற ஆசை தான் என்னை இக்காரியம் செய்யத் தூண்டியது; தவறிருந்தால் என்னை மன்னித்துவிடுங்கள்; என்று தழுதழுத்த குரலில் பரமுவின் கரங்களை தன் பூக் கரங்களால் பற்றியபடியே கெஞ்சினாள் வள்ளி.

பரமுவால் எதுவும் பேச முடியவில்லை. அவன் நெஞ்சம் குழம்பிற்று. ''அய்யோ வள்ளிக்குக் கண் வந்துவிட்டால்; பிறகு...!'' அவனால் அந்த பயங்கர விளைவை நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை.

''போ! வள்ளி: போய் படுத்துக் கொள்; நீ என்ன பெரிய தவறு செய்துவிட்டாய் இப்படி கலங்கி நிற்க'' அவன் தொண்டை கரகரத்தது; கண்களில் நீர் தளும்பி நின்றது. அவன் அங்கிருந்து வேகமாகப் போய்விட்டான். அவன் உள்ளத்திலே அதுவரை நீறுபூத்த நெருப்பாக அமைந்து போய் இருந்த மனப் புயல் மீண்டும் அவனை அலைக்கழித்தது.

★

''டாக்டர் நீங்கள்தானே வள்ளியின் கண்களுக்கு சிகிச்சை செய்வது!

''ஆம்!''

''அவள் கண்கள் குணமாகி விடுமா''

''இன்றோடு சிகிச்சை முடிகிறது; நாளைக் காலை அவளுக்கு கண் தெரியும்!''

''உண்மையாகவா டாக்டர்!''

''சந்தேகமில்லாமல்...!''

அடுத்த சில வினாடி அங்கே பயங்கர அமைதி நிலவியது,

''டாக்டர்!'' உணர்ச்சி பீறிட அழைத்தான்,

''அவளுக்குக் கண் தெரியக் கூடாது; குருடியாகவே இருக்க வேண்டும் டாக்டர் அவள் குருடியாகவே இருக்க வேண்டும்!' வேதனை பொங்க இந்த வாசகங்களை வெளியிட்டான் பரமு.

''இதைச் சொல்ல நீ யாரப்பா!''

''அவள் கணவன் டாக்டர்!''

''விசித்திரமான கணவனப்பா நீ; மனைவி குருடியாக இருக்க வேண்டும் என்று சொன்ன முதல் பைத்தியக்காரனை இன்று தான் சந்திக்கிறேன்'' லேசாக சிரித்தார் அந்த டாக்டர்,

*''டாக்டர் தயவுசெய்து இப்படி வாருங்கள்; என் முகத்தை நன்றாகப் பாருங்கள் டாக்டர், என் பயங்கர முகத்தை நன்றாகப் பாருங்கள்'' கண்களில் நீர் ததும்ப கெஞ்சினான் பரமு!*

*நள்ளிரவு; மேஜை விளக்கின் மங்கலான ஒளியில் பரமுவின் முகம் சரியாகத் தெரியவில்லை. மின்சார விளக்கின் விசையை அழுத்தினார் டாக்டர்; பரமுவின் விகாரமடைந்திருந்த முகத்தை ஆச்சரியமெதுவுமில்லாமல் சாதாரணமாகவே பார்த்தார் அந்த வெள்ளைக்கார டாக்டர்!*

*''என்ன டாக்டர் இவ்வளவு அமைதியாக என்னைப் பார்க்கிறீர்கள்!''*

*''பழக்கம்தான் காரணம்; இப்படிப் பலவற்றை நான் பார்த்துப்*

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்





# சபாஷ், நாயகரே!

''நான் இந்த மசோதாவை எதிர்க்கிறேன். எனது பண்டைய பெருமையை இந்த மசோதா மறுக்கிறது. எனது நிகழ்கால வாழ்வுக்கும் உலைவைக்கிறது. மாற்றம் எதுவுமின்றி இந்த படுபாதகமான மசோதா சர்க்கார் தஸ்தாவேஜிலேயே இருந்தால் எனது குழந்தைகளுக்கும், அவர்களின் சந்ததிகளுக்கும் இது நீதி வழங்காது, அவர்களுக்கு உரிமையும் தராது. இந்த மசோதாவின் மூலம், இந்த நாட்டின் நேர்மையான பிரஜைகளாய், சுதந்திரமாக வாழவும், ஜீவிதம் நடத்தவும் இந்த நாட்டுக்கு சொந்தமான தமிழ் பேசும் மக்களின் உரிமைகளை ஆட்சியினர் மறுக்கின்றனர். நாங்கள் வாழ்ந்த பெருமைகள் அத்தனையையும், நாங்கள் அருமையாக வாழ்வதையும், சிறப்புற எதிர் காலத்தில் நாங்கள் வாழ எண்ணி இருப்பதற்கும் சாவு மணி அடித்து எங்கள் உரிமைகள் அத்தனையுமே இந்த மசோதா தட்டிக் கொண்டு போய் விடுகிறது.

இந்த மசோதாவில் குறிக்கப்படாத ஒன்றுண்டு. என்றாலும் எங்கள் தாய்மொழியை எங்கள் இல்லத்தில் பேசும் அந்த உரிமையை மறுத்துவிட இந்த மசோதாவின் பிரச்சார கர்த்தாக்கள் முயன்றால், எங்களிடமிருந்து பறிக்க வேறு உரிமைகளே இல்லாமல் போய் விடும். மனிதனிடமிருந்து மற்றொரு மனிதன் பறிக்க முடியுமான உரிமைகள் அவ்வளவுதான் உலகில் இருக்கின்றன.

இந்த அரசாங்கமோ அல்லது வேறு எந்த அரசாங்கமும், உலகத்திலுள்ள படுபாதகர்கள் கூட என்னை போஷித்த தந்தையுடன், என்னைப் பெற்றெடுத்து பாலூட்டி தாலாட்டிய என் அன்னையுடன் தாய்மொழியில் தமிழ் மொழியால் பேசுவதை தடுக்க முடியாது. எனது மொழிக்கு உரிமை மறுப்பது மூலம் தமிழ் தேசிய இனத்தைச் சேர்ந்தவன் என்ற ரீதியில் எனக்குள்ள, எனக்கிருக்கவேண்டிய எல்லாவற்றிற்குமே நீங்கள் சாவு மணி அடிக்கிறீர்கள். நாங்கள் எங்கள் வாழ்வை 'வாழி பாடி'விடவேண்டும், இந்த நாட்டில் நாங்கள் இருப்பதே இல்லாமல் ஒழிந்துபோக வேண்டும். இது தான் உங்கள் முடிவு. நீதியின் நாமம் கொண்டு நேர்மையான காரணம் கொண்டு எங்களை அழிக்க உங்களுக்கு உரிமையில்லை.''

—கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தோழர் கந்தையாதான் இலங்கைப் பாராளுமன்றத்திலே கொட்டும் மழைபோ, கோடை இடியோ வெனக் கர்ஜனை புரிந்திருக்கிறார்.

எழில் குலுங்கும் தமிழ்ப் பொழிலில் மூர்த்தி எனும் மந்தி நுழைந்து அழிவு வேலை புரிவதை அமைதியுடனும், இந்தியா ஒற்றுமைப்படுகிறது என்ற அகமகிழ்ச்சியுடனும் பார்த்துக்கொண்டிருக்கும் ஜீவனங்கள் வெட்கித் தலைகுனியும் அளவுக்கு; நான் ஒரு மறத்தமிழன்; மறைந்துவிடாது என் மான உணர்ச்சி—என்று மார்தட்டிப் பேசியிருக்கிறார், கம்யூனிஸ்ட் தலைவர் கந்தையா!

அவர் மட்டுமா? கண்ணீர் வழிந்தபடியே அன்னைத் தமிழுக்கு நேர்ந்த அநீதிகளைக் கண்டித்தார் தோழர் ஜி. ஜி. பொன்னம்பலம்,

''நூற்றைம்பது வருட காலமாகத் தமிழர் ஆங்கிலத்தை உத்தியோக மொழியாக ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. இனி ஆங்கிலத்துக்குப் பதிலாகச் சிங்களத்தை உத்தியோக மொழியாக ஏற்றுக் கொள்ளும்படி இன்று கோருகிறீர்கள். சிங்களவரோடு சேர்ந்துநின்று போராடி இலங்கைக்குச் சுதந்திரம் ஈட்டிக்கொடுத்த தமிழ் மக்களுக்கு இதுதான் கிடைத்த பலனா?

''இலங்கையின் எல்லாப் பகுதிகளிலுமே சிங்கள மக்கள் மத்தியில், அவர்களோடு நெருங்கிப் பழகியிருக்கிறேன். வாழ்விலும் தாழ்விலும் அவர்கள் எனக்குத் தெரிந்தவர்கள்; நண்பர்களாகப் பழகியிருக்கிறார்கள். விரோதிகளாகவும் பழகியிருக்கிறார்கள். அவர்களிடம் கேட்கிறேன், தயவு செய்து சற்று யோசித்துப் பாருங்கள். என்னைப் போல ஒரு தமிழனாக நீங்கள் இருந்தால் இன்றைய நிலையில் என்ன செய்வீர்கள்? உங்களுடைய தாய்மொழி உரிமை இழந்து அழிந்து போகப் பார்த்துக்கொண்டிருப்பீர்களா?

''நீங்கள் சிங்களத்தைச் சட்டமாக்குங்கள். ஆனால் எனது பிள்ளையோ பேரப் பிள்ளையோ சிங்களப் புத்தகத்தைத் தொட நான் கடைசிவரை விடப்போவதில்லை''

—அரசாங்கத்துக் கட்சியைச் சேர்ந்தவர்கள்கூட கல்லாகி விட்டார்களாம்; பொன்னம்பலனாரின் உணர்ச்சிமிக்க உரையதனைக் கேட்டு!

டாக்டர் விக்ரமசிங்காவின் பேச்சும் அப்படித்தான்-வீரமும் ஈரமும் வார்த்தைக்கு வார்த்தை தலைகாட்டி நிற்கின்றன.

''போலந்தை அடிமைபடுத்திய போது ஹிட்லர் என்ன கூறினார்? ஜெர்மன் பாஷையை வளர்க்க வேண்டுமானால், போலந்து பாஷையை ஒழிக்க வேண்டும் என்று பிரச்சாரம் செய்தார். இந்த அக்கிரமத்தைதான் நீங்களும் செய்கிறீர்கள். போலந்து மொழியை அழிக்க முனைந்த ஹிட்லரும், அவன் சகாக்களும் இன்று எங்கே? போலந்து மொழி வாழ்கிறது, ஜெர்மன் மொழிகூட இன்று வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால், மொழி ஒழிக்கக் கிளம்பிய கிராதகர்களை இன்று காணக் கிடைக்கவில்லை ஹிட்லரைப் போன்றுதான் நீங்களும் அழியப்போகிறீர்கள்.

''தமிழுக்கு சமஅந்தஸ்து கொடுத்தால் சிங்கள மொழி கலை கலாச்சாரம் அழிந்துபடும் என்று கூறி தமிழ் இனத்தையே இன்று அழிக்க முற்பட்டிருக்கிறீர்களே, இது நியாயமா? 'மைத்திரி' என்றும், சகோதரத்துவம் என்றும் பேசும் உங்களின் புத்த தர்மம் இதுதானா?''

—படிக்கும்போதே கண்கள் குளமாகின்றன; அய்யகோ தமிழனே? ஆண்ட இனமே! உலகத்தில் மற்ற இனங்களெல்லாம் இன்னல் தெரியாமல் வாழும்போது, நீ மட்டும் அவதிப்படுவதற்காகத்தான் தோன்றினையா? துன்பம் இப்படித்தான் இருக்கும்; தொல்லைகளை இப்படித்தான் தாங்க வேண்டும்-என்று மற்றவர்களுக்கு பரிட்சை செய்து காட்டுவதற்காகத்தான் நீ பிறந்தாயா? கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே நாகரிகப் பண் பாடி வாழ்ந்த நாயகமே! இன்று உலகம் உன்னை நாயைப் போலவா நடத்த வேண்டும்?—சிந்தனை நம்மைக் குடைகிறது சிங்களவர் செய்யும் அநீதியை நினைக்கும்போது!

'இந்த உரிமையை நீர் பறித்துக் கொண்டால் இனிமேல் எம்மிடமிருந்து பறிப்பதற்கு வேறு உரிமைகளே கிடையாது'—திரு கந்தையா!

'என் உடலில் உயிர் இருக்கும் வரையில் என் குழந்தைகள் சிங்களப் புத்தகத்தைத் தொடுவதற்கு விடமாட்டேன்'—பொன்னம்பலனார்!

'இட்லரைப் போலத்தான் நீங்கள் செய்கிறீர்கள்; இட்லரைப் போலத்தான் நீங்கள், அழியப்போகிறீர்கள்' டாக்டர் விக்ரமசிங்கா!

கணவனைப் பறிகொடுத்த இளம் காரிகையைப்போல; பிள்ளைக் கனியமுதைப் பலிகொடுத்த பேதைத் தாயைப் போல அழுது புலம்பியிருக்கிறார்கள்; அடுக்குமா இந்த அக்ரமம என்று வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு கதறியிருக்கிறார்கள்—தமிழர் பிரதிநிதிகள்!

—இவ்வளவுக்கும் பிரதமர் பண்டார நாயகாவின் இரும்பு நெஞ்சம் இளகவில்லை; குருட்டுப் போக்கு மாறவில்லை!

அய்யா. பண்டாரநாயகாவே! கிஞ்சிற்றும் நீவிர் பதைபதைக்க வேண்டாம். இந்தத் தமிழர்கள் பொட்டுப் பூச்சியினும் கேவலமானவர்கள்; புன்மைத் தேரையிலும் மிக்க புன்மை கொண்டவர்கள். இந்தத் தேய்ந்து போனதுகளால் என்ன செய்ய முடியும்?

அவர்களுக்கென ஒரு நாடு, உம் நாட்டிற்கும் வடக்கே-விந்தியத்திற்கும் தெற்கே பரந்து விரிந்து கிடக்கிறதே-என்று நினைக்கிறீரா? சுத்தப் பைத்யம் அய்யா, நீங்கள்! சென்னை என்கிற பெயரை தமிழ் நாடு என்று அழைப்பதற்கே அஞ்சி நடுங்குபவர்கள், அவர்கள்? அந்தக் கோழைகள் எங்கே காரிய மாற்றப் போகிறார்கள்?—

காமராசர்-என்று ஒருவர் சென்னையில் பிரதமராக இருக்கிறாரே-என்ற கருத்து குறுக்கிடுகிறதா? அவருக்கு இதிலெல்லாம் அக்கரை கிடையாது; அவருக்கு வேண்டியது, மாடு! மாடு!! மாடு!!!

வேறென்ன இருக்கிறது அவர்களுக்கு? கொழும்பில் ஒரு தமிழன் இந்தியாவின் தூதுவனாக இருந்தால் அவனாவது தன்னுடைய இரத்தம் கொதிப்பேறப் பெற்று கண்டனக் கணைகளை ஏவியிருப்பான். பிரச்னையை உலகத்தின் கண்ணோட்டத்திற்கு எடுத்துக் காட்டியிருப்பான். இப்போது அதற்கும்தான் வழியில்லையே!

பிரதமர் நேரு என்று ஒருவர் இருக்கிறாரே-என்று எண்ணுகிறீர்களா? அவர் இவர்களுக்குப் பிரதமர் அல்ல; போயும் போயும் 'காட்டுமிராண்டி'களுக்கா அவர் பிரதமராயிருப்பார்? அவர் வட நாட்டுக்காரர்களின் பிரதமர்.

ஆகவே ஈழத்தின் கதாநாயகரே! தமிழனென்று ஒரு உயிர் இருக்கும் வரையில் உங்கள் அழிவுவேலையை அணு குண்டினும் வேகமாகச் செய்து முடியுங்கள். அப்போதுதான் இந்தத் தமிழர்களுக்கு மானம் வெட்கம்-சூடு சொரணை என்ற—பல பொருள்களில் ஒரு பொருளாவது ஏற்படும்!

பண்டார நாயகா.

# நீட்டோலை

★ 4-ம் பக்கத் தொடர்ச்சி

'லாகிரி' வஸ்துக்களை உபயோகிப்பவர் தீவிர மெம்பர் அல்ல''—என்று கூறப்படுமேயானால் அந்த அளவுகோலின்படி ''பைப்''பும் கையுமாக இருக்கும் அபுல்கலாம் அசாத்தும், வெண்புகைச் சுருட்டுப் பழக்கத்தை விடமுடியாமல் தவிக்கும் பண்டித நேருவும் என்ன ஆவார்கள் என்பதை யோசித்துப் பார்!

காங்கிரசை எதிர்த்து மக்களிடம் வாக்குகளைப் பெற்று, சுவற்றிலே தேர்தல் பிரச்சாரத்திற்காக எழுதப்பட்ட கோழிச் சின்னங்கள் கூட மழையிலே கரைந்து மறைவதற்கு முன்பு காங்கிரசிலே சேர்ந்து மந்திரியாகிவிட்ட ராமசாமிப் படையாச்சிகூட ''தீவிர மெம்பர்''தான்!

அபேட்சகராக இருக்க விரும்புவோர் காங்கிரசில் ஆற்றிய பழைய காலத் தொண்டு என்ன? என்று கேட்கப்படுகிறது; யோக்கியதாம்சப் பட்டியலில்!

உள்ளபடியே தொண்டுகளுக்கேற்றவாறுதான் மதிப்பு தரப்படுறதா? தியாகம்தான் காங்கிரசிலே போற்றப்படுகிறதா? வேலூரிலே சீதாபதி என்பவர் சென்றதடவை காங்கிரசை எதிர்த்த சுயேச்சை நகரசபைத் தலைவர்! இந்தமுறை காங்கிரசிலே சேர்ந்தார். சேர்ந்த அடுத்த வாரம் காங்கிரசை விட்டு விலகினர். விலகிய மறுவாரம் மீண்டும் காங்கிரசிலே சேர்ந்தார். இவர்கூட 'தீவிர மெம்பர்'தான்! ''பழையகால சேவை'' என்ற அளவுகோலில் நிறுத்தப்பட்டு காங்கிரஸ் அபேட்சகராக பொறுக்கப்பட்டவர்தான்!

இன்னும் எத்தனையோ சந்தர்ப்பவாதிகள்! அவர்களுக்கு காங்கிரஸ் ''சங்கப் பலகை''யிலே முதல் இடம்!

உனக்குத் தெரியாது என்று கருதுகிறேன்; திருவாரூரிலே சிங்காரவேலு என்ற ஒரு தேசியத் தியாகி! நல்ல வாலிபர். தெருவிலே தம்பட்டமடித்து பொதுக்கூட்டத் துண்டு அறிக்கைகளை வழங்குவார். பொதுக்கூட்டங்களில் பேசுவார். சிறைச் சாலைக்கும் சென்றிருக்கிறார். திருவாரூர் காங்கிரஸ் இளைஞர்களிடத்திலே செல்வாக்கு பெற்றவர்! அவர் முன்பொரு நகரசபைத் தேர்தலிலே அபேட்சகராகப் போட்டியிட்டு, உள்ளூரிலே ஒரு காங்கிரஸ் பணக்காரரின் எதிர்ப்புக்கு ஆளானார்! அந்தப் பணக்காரர், ராவ்பகதூராக இருந்து ராவ்பகதூர் பட்டம் பெற்றதற்காக கோயிலுக்கு உற்சவம் நடத்தி—பின்னர் காங்கிரசின் கை வலுப்பதை உணர்ந்து, ராவ்பகதூர் பட்டத்தை விட்டு, பட்டம் இழந்ததற்கும் கோயிலுக்கு விழா நடத்தி—காங்கிரசில் சேர்ந்தவர்! அதாவது ''தீவிர மெம்பர்!'' அவருடைய எதிர்ப்புக்கு இரையானார் ஏழைத் தியாகி சிங்காரவேலு!

விடுதலை கிடைக்கும் வரையிலே தியாகிகள் தேவைப்பட்டார்கள்! இப்போது காங்கிரசுக்கு தியாகம் விலை என்னவென்று கேட்கும் 'தீவிர மெம்பர்கள்' தேவைப் படுகிறார்கள்!

இந்தத் தொகுதியிலே யாருக்கு வெற்றி கிடைக்கும்? பணம் அதிகமாகச் செலவழிக்கக்கூடியவர் யார்? அவரை எப்படியாவது காங்கிரசில் சேர்த்துவிட வேண்டும்! இந்த உள்நோக்கோடு திட்டம் வகுத்துக்கொண்டு தேர்தலைப் பற்றிய நிபந்தனைகளை பகட்டாகப் பத்திரிகைகளில் கொட்டை எழுத்தில் போட்டுக் காட்டுகிறது காங்கிரஸ் கமிட்டி!

தெற்கே எதிர்ப்பு கடுமையாக இருக்குமென்பதை காங்கிரசார் உணர்ந்துகொண்டிருக்கிறார்கள்!

அதனால் ''தீவிர மெம்பர்''கள் விஷயத்தில் வடக்கே காட்டப்படும் கெடுபிடிகூட இங்கே காட்டப்படமாட்டாது'

அரசியல் பச்சோந்திகளுக்கு அட்டியின்றி இடம் கிடைக்கும்! தி. மு. கழகத்தை எதிர்க்க இவர் சரியான ''ஜாம்பவான்'' தானா? இதுதான் உரைகல்லாயிருக்குமே தவிர-தியாக பரம்பரையா? என்ற கேள்வி எழும்பிடவே இடமிருக்காது!

தேர்தலுக்கான யோக்கியதாம்சங்கள் தயாராகிவிட்டன. திட்டங்கள் வகுக்கப்பட்டுவிட்டன. திரவியமும் மலைபோலுண்டு அவர்களிடம்!

அவர்களைத்தான் நாம் சந்திக்க இருக்கிறோம்! அவர்களோ அறிவிப்பு கண்டவுடனே சந்திக்கு சந்தி, சிந்து பாடத் துவங்கி விட்டார்கள்!

பாடட்டும்; அவர்கள் பட்டியலும் வெளி வரட்டும்-பொறுத்திருந்து பார்ப்போம்!

உன், அன்புத் தோழன்.



## பிறைவானம்...

★ 11-ம் பக்கத் தொடர்ச்சி

பட்டினியோட உன் ஆறு வயசுத் தம்பி படும்பாட்டை நீ பார்த்தியா—''

''அட, என் ராசா!'' என்று கேட்டுக்கொண்டே அவன் தாய் அப்போது ஓடி வந்தாள். ஆனால் மகனை கோபத்துடன் நின்று கொண்டிருக்கும் காட்சியைக் கண்டதும் திடுக்கிட்டாள். ''என்னடா கண்ணு என்ன நடந்தது?'' என்று அன்புடன் கேட்டாள்.

''என்ன நடந்ததா? நானும் மாடு மேய்க்க வேண்டிய நேரம் வந்துட்டு! நீயாசும் நாலு ரூபா பணம் வாங்கிக்கொடு'' என்று கத்தினான் ராசு.

''நான் எங்கேடா போவேன்!'' என்றாள் அம்மா!

''எங்கே போவீங்களோ எனக்கு எப்படித் தெரியும்?'' என்று உறுமினான் ராசு!

''இந்தாடா கண்ணு! முதல்ல இதைக் குடிச்சுட்டு பேசுடா!'' என்று கஞ்சிக் கலயத்தை எடுத்து வந்து நீட்டினாள் அம்மா!

''இந்தக் கஞ்சி எவனுக்கு வேணும்? எனக்கு வேண்டியது நாலு ரூபா!'' என்று கத்தியபடி கலயத்தை ஓங்கி தட்டி விட்டான். மறுகணம் எம்பிக் குதித்த கலயம் அப்பாவின் மண்டையில் மோதி தாக்கி சுக்கல் சுக்கலாக உடைந்தது!

''ஐயோ!'' என்று அலறினான் அப்பா. மீண்டும் இருமத் தொடங்கினான்.

வானத்தில் ஒரு பயங்கர உறுமல்! மழை 'சோ' என்று பெய்தது. குடிசை முழுதும் ஒழுக ஆரம்பித்து விட்டது!

''அடப்பாவி!'' என்று கத்தினாள் அம்மா!

ராசுவும் கத்தினான். ''ஐயோ! என் படிப்பெல்லாம் போச்சே!'' என்று அலறினான். 'ஓ' என்ற மழை இரைச்சலுடன் போட்டியிட்டுக்கேட்டது அவன் குரல்! தாயைத் திட்டினான்; தந்தையைத் திட்டினான்; வாய் ஓயும் வரை திட்டினான். குடிசையை விட்டு வெளியே பாய்ந்தான்.

ஏமாற்றப்பட்ட அந்த ஏழைத் தம்பியின நெஞ்சு குலுங்கிக் குலுங்கி அழுதது. ஆத்திரத்தால் அலை மோதியது. நடந்தான் திருவாரூரை நோக்கி!

கரிய இருள்—கடுமையான காற்று—கொடிய மழை—அவன் ஒன்றையும் கவனியாமல் நடந்து கொண்டே இருந்தான்!

'அண்ணா! அண்ணா'' அப்போது பின்புறமிருந்து எழும்பியது அந்தக் குரல்!

திரும்பிப் பார்த்தான். தன் பிஞ்சுக் கால்கள் சேற்றில் சிக்கிச் சுழல, கொட்டும் மழையிலே ஓடி வந்து கொண்டிருந்தான் அவனது ஆறு வயதுத் தம்பி!

ராசு சிலைபோல் நின்றான். தம்பி அருகில் வந்தான். துணியில்லாத அந்த உடல் மழையில் நனைந்து குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தது. ''அண்ணா! அண்ணா!...அப்பா அப்பா...பேசவேயில்லை...இருமவும் இல்லை. அம்மா 'ஐயோ ஐயோ'ன்னு அழுவுறாங்க!.. நீ வாண்ணா!'' என்று கையை பிடித்து இழுத்தான்.

ராசுவுக்குத் 'திக்' கென்றது. திரும்பி ஓடினான். அம்மாவின் அழுகுரல்தான் அவனை எதிர்கொண்டு அழைத்தது!

★

இப்போது ராசு தந்தையின் தொழிலை மேற்கொண்டு விட்டான்.

—சொர்ணம்.

## வள்ளித் திருமணம்...

★ 8-ம் பக்கத் தொடர்ச்சி

பார்த்து பழகிவிட்டேன், அவ்வளவு தான்''

''டாக்டர், நினைத்துப் பாருங்கள்! இந்தக் கோர சொரூபத்தை என் குலவிளக்கு பார்த்துப் பார்த்துக் குமுற வேண்டுமா? இந்த விகாரருக்காக நான் வாழ்க்கையைப் பட்டேன் என்று அர்த்தவண்ண மேனியாள் தன் வாழ்நாள் முழுதும் அழுது அழுது வாடவேண்டுமா? வேண்டாம் டாக்டர்; தானாகக் கிடைத்த தங்கச் சிலையவள்; சமுதாயம் என்னை விரட்டி, என் வாழ்வைச் சூன்ய வெளியாக்கிவிட்ட போது எனக்கு சுகம் அளிக்க வந்த அந்த சொர்ண விக்ரகத்தைத் தட்டிப் பறித்துவிடாதீர்கள்; உங்கள் காலில் முகம் புதைத்து வேண்டுகிறேன். என் இன்ப வாழ்வைச் சூறையாடி விடாதீர்கள்!''

''அவள் துன்பத்திலே உனக்கு இன்பம்; சுயநலக்காரனப்பா நீ!''

''நானாக அவள் கண்களைப் பறித்துவிடவில்லையே!''

''இயற்கை அவள் கண்களை இருட்டாக்கிவிட்டது; நான் மனிதன் மீண்டும் ஒளி தருகிறேன் அவள் கண்களுக்கு! அதை நீயேன் தடுக்கிறாய்?''

''என் வாழ்வு...!'' இது பரமு.

''என் கடமை...!'' இது டாக்டர்.

''உங்கள் முடிவு...?'' மீண்டும் கேட்டான் பரமு!

''மாற்ற முடியாது!'' அழுத்தமாகச் சொன்னார் ஆங்கில காட்டு மருத்துவர்!

அந்த நள்ளிரவில் மருத்துவமனையைவிட்டு வெளியேறினான்; தலைகால் தெரியாமல் வேகமாக நடந்தான்.

★

பொழுது எப்போது விடியும்? ஒவ்வொரு வினாடியும் துடித்துக் கொண்டிருந்தாள் வள்ளி! சரியாக விடிவதற்கு முன்னால் மருத்துவமனைக்கு விரைந்தாள், தாண்டவனின் உதவியோடு!

''எனக்குக் கண் தெரிகிறது டாக்டர்! எல்லாவற்றையும் பார்க்கிறேன்! இதோ தாண்டவன்! இதோ நீங்கள்! இது...இது...!'' சந்தோஷப் பெருக்கால் ஏதேதோ பேசினாள்.

''பரமு...பரமு...தாண்டவா சீக்கிரம் வா!'' உணர்ச்சிகள் கூத்தாடின! வேகமாக வீட்டிற்குள் நுழைந்தாள் வள்ளி! கண் பெற்ற சந்தோஷச் செய்தியை தன் அத்தானிடம் சொல்வதற்கு! அங்கே அவள் கண்ட காட்சி...!

ஒரு குரூபியின் உடல் ஜில் விட்டுப் போய் தரையிலே பிணமாகக் கிடந்தது. அந்த மனிதனின் கோரமான முகத்தைப் பயங்கரமாக உற்றுப் பார்த்தாள் வள்ளி!

''தாண்டவா...யாரோ வழிப் போக்கன் இங்கேவந்து செத்துத் தொலைந்திருக்கிறான்!'' வள்ளி சொன்னாள்.

தாண்டவன் அமைதியாக நின்றான்; அவன் கண்கள் கலங்கின!

''என்ன தாண்டவா...ஏன் அழுகிறாய்...யார் இந்த மனிதர்?,' அவசரத்தோடு கேட்டாள்.

''இவர்தானம்மா உன் கணவர்!''

அவள் தலை சுழன்றது; கண்கள் இருளடைந்தன; துடரப் பெருக்கால் அவள் தரையிலே மயங்கி விழுந்தாள்; உலகம் உண்மையிலேயே அவளுக்கு இருண்டு விட்டது போல் ஆயிற்று!

—ஏ. கே. வில்வம்.



# படித்த பையன்!

ராசு ஓடிக் கொண்டிருந்தான். சூழ் நிலை மறந்து-பரவிவரும் இருளை மறந்து—ஒரே குறிக்கோளுடன் போராடும் இலட்சிய வீரனைப் போல ஓடிக் கொண்டிருந்தான்.

மாலை நேரம்—மணி என்னவோ நான்குதான் இருக்கும்! ஆனால் முன்னிரவு நேரம்போல் தோன்றுகிறது. வான மண்டலத்திலே கப்பிக் கிடந்தது மேகக் கூட்டம்; அதுதான் சூழ்ந்துவரும் இருளுக்குக் காரணமா?

அதோ, அப்படியானால் ராசுவின் இருதயத்திலே சூழ்ந்து கிடக்கும் கவலை மேகங்கள்...ஆமாம்; ஆமாம்; அவனது பால் வடியும் வதனத்திலே படர்ந்திருக்கும் இருளுக்கு-சோகத்திற்கு-அவைதான் காரணம்!

'கடமுடா' என்று இடித்தது ஒரு பேரிடி! அதைத் தொடர்ந்து 'பளீர்' என்று தோன்றி மறைந்தது ஒரு மின்னல்!

அந்த மின்னலின் உதவியால் ராசுவை நன்றாகக் காண முடிந்தது. இடியின் உறுமல் அவனைக் கலங்க வைக்கவில்லை போலும்; அவன் ஓடிக் கொண்டுதான் இருந்தான். அவன் எங்குதான் ஓடுகிறான்? ஏன் தான் ஓடுகிறான்?

'வரட்டுமா? வந்து விடட்டுமா?' என்று கேட்டுக் கொண்டிருந்தது மழை;'சில்' லென்று அடித்த மென் காற்று அதை ஆமோதித்தது. அதைப் போலவே ராசுவின் கண்களும் மழை பொழியத் தயாராக இருந்தன!

எதிரே ஒரு ஆறு குறுக்கிட்டது. திருவாரூரையும் முகந்தனூரையும் பிரிக்கும் அந்த ஆற்றில் ஆண்டுக்கு ஆறு மாதங்கள் தண்ணீரே இருக்காது. ராசு அந்த ஆற்றில் இறங்கினான். இப்போது அதில் தண்ணீர் இல்லை. ஆனால் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தோண்டப்பட்ட 'தற்காலிக' கிணறுகள் மட்டும் இருந்தன. அதாவது ஊற்றுகளைச் சொல்லுகிறேன். ராசு அந்த ஊற்றுகளைப் பார்த்தான். மறுகணம் அவன் மனதிலே ஏதோ ஒரு நினைவு:

''தொட்டனைத்து ஊறும் மணற் கேணி மாந்தர்க்கு
கற்றனைத்து ஊறும் அறிவு''

கல்வியைப் பற்றிய குறள்!

அன்று தமிழாசிரியர் சொல்லித் தந்தார். தோண்டிய அளவு ஊற்றிலே நீர் சுரக்கும்; அதைப்போல கற்ற அளவுதான் மக்களின் அறிவு பெருகுமாம்! இதை எவ்வளவு அழகாக எடுத்துச் சொன்னார் தமிழாசிரியர்! கல்விக்குத்தான் எத்தனை பெருமை!

ராசு ஓடிக் கொண்டிருந்தான்: ஆனால் அவனது குழம்பிப் போன மனமோ பின்னோக்கி ஓடியது! படிக்க வேண்டுமென்ற அவனது ஆசை—அதற்கென்று அவன் தொடுத்த போராட்டம்—பெற்ற இன்னல் அல்லல்கள்—அப்பப்பா! முகந்தனூர் சிறு கிராமம்; அங்கே பிறந்த அவனுக்கு தானும் படிக்க வேண்டுமென்று ஆசை பிறந்ததே பெரிய ஆச்சரியம்தான்! 'ஏன் தம்பி நமக்கு இந்த வம்பெல்லாம்?' என்று உபதேசித்த பெரிய மனிதர்களும் அந்த ஊரில் இருந்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

ராசுவின் தந்தையோ மாடு மேய்த்துப் பிழைப்பவன். அவனது மூலதனம், ஒரு மூங்கில் கம்பும், சோற்று மூட்டையும்தான்! பொழுது விடிந்ததும் ஊரிலுள்ள மாடுகள் அத்தனையையும் ஓட்டிக் கொண்டு வயல் வெளிக்குப் போய் விடுவான். மீண்டும் திரும்பி வரும் போது சூரியன் மறைந்துவிடுவான். அவனுக்குப் பிறந்தவன் பள்ளிக்குச் செல்ல வேண்டும்— படித்து மேதையாக வேண்டும் என்று ஆசைப்படலாமா? வேண்டாத விருப்பமல்லவா அது?—இப்படிக் கேட்டான் ராசுவின் அப்பாவும். ஆனால் ராசு எந்த சமாதானத்தையும் ஏற்பவனாக இல்லை. அவனது பிஞ்சு மனதிலே பதிந்து போன அந்த விதை வளர்ந்து, செடியாகி, மரமாகி, கிளை பல விரித்து, வானளாவ உயர்ந்து நின்றது! அதற்கு முன்னால் தந்தையின் தடையும், தாயின் அன்புக் கட்டளையும் என்ன செய்யும்?

படிப்பதற்கு வசதி ஏது? இந்த வினா எழும்பியபோது ராசு, தான் முன்னாலேயே தயாரித்து வைத்திருந்த யோசனையை வெளியிட்டான். திருவாரூரில் யாரோ ஒரு பணக்காரராம்; பெரிய மனிதராம்; ஏதோ 'பெரிய மனது பண்ணி' ஒரு சத்திரம் கட்டி வைத்திருக்கிறாராம். அதையே கொஞ்சம் ஆங்கிலம் கற்ற பையன்கள் 'ஹாஸ்டல்' என்று சொல்லிக் கொள்ளுவார்களாம்.

அங்கே இலவச சாப்பாடு போடுவார்கள்; தங்க இடமும் கிடைக்கும்; பள்ளிக்கூடத்துக்கு சம்பளம் கட்ட வேண்டியதுதான் செலவு. அதிலும் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவன் என்ற காரணம் காட்டி அரைச் சம்பளம் குறைத்துக் கொள்ளலாம்! ராசு இந்தச் செய்தியை எப்படித்தான் சேகரித்தானோ மளமளவென்று வெளியிட்டான். அதன் பிறகுதான் பல திறப்பட்ட எதிர்ப்புகளுக்கிடையே அவனது பலநாள் கனவு நிறைவேறும் அந்த நாளும் வந்தது!

இது நடந்து ஐந்து வருடங்கள் சென்று விட்டன. கிராமத்துத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் ஆனா, ஆவன்னா என்று கத்திக் கொண்டிருந்த ராசு, இப்போது ஏழாவது வகுப்பு மாணவன்! யாராவது கேட்டால் 'செகண்ட் பாரம்' என்றுதான் சொல்லுவான் அவன்.

ராசு ஆற்றைக் கடந்து மேலும் ஓடிக் கொண்டிருந்தான். அவன் மனதிலே வள்ளுவரின் அந்தக் குறள் இன்னும் ஒலித்துக் கொண்டேயிருந்தது. தமிழாசிரியர்தான் எத்தனை தங்கமானவர்; அன்பொழுக பாடம் சொல்லித் தரும் பண்புதான் எத்தகையது—இப்படி எண்ணினான். ஆனால் பொல்லாத தலைமை ஆசிரியரோ... அப்பப்பா!...பெரும் கோபக்காரர் அவர்!...

''காசில்லாத கபோதிகள் எதற்கு படிக்க ஆசைப்படணும்? இந்தாடா ராசு... இரண்டு மாத சம்பள பாக்கியையும் நாளைக்கு காலையிலே கட்டல்லே......உன் பெயரை அடித்து விடுவேன்! அப்புறம் பள்ளிக் குள்ளே நுழையவே முடியாது! கவனம்!''...—

எத்தனை கோரமாக இருந்தது அவரது குரலும், முகமும்!

ராசுவுக்கு அழுகையே வந்து விட்டது' கையாலாகாதவனுமே நான்; நாளைக்கு இரண்டு மாத சம்பளம் நான்கு ரூபாயையும் கட்டா விட்டால்...? ஐயையோ!—அதற்கு மேல் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை அவனால்! அவன் மனக்கோட்டை தவிடு பொடியாவதை எப்படி சகிப்பான்?

அவ்வளவுதான்; எப்போது பள்ளிக்கூடம் முடியும் என்று காத்துக் கிடந்தான்.

''டாண்! டாண்!'' என்று தம்பிகளுக்கு விடுதலை வழங்கியது பள்ளிக்கூட பெரிய மணி!

''என்ன மிஸ்டர் ராசு! இன்னை போட தீர்ந்துதா பள்ளிக்கூடம்? வகுப்பிலே முதல் பையனா இருந்து என்னடா பிரயோசனம்? 'ஜாலி'யா சுத்த முடியுதா? மாங்கா அடிக்க முடியுதா?.. இனிமே நீ எதுவேணுமோ செய்யலாண்டா! நானையிலே யிருந்து நெசமாவே நீ ராசா தாண்டா!'' என்று அவன் பக்கத்திலே நின்று டாகாசம் செய்த வனைக்கூட திரும்பிப்பாராமல் ராசு ஓட்டம்பிடித்தான்.

## பிறைவானம்

பிள்ளைகள் பகுதி

அப்பாவிடம் பணம் இருக்கும்; நிச்சயம் இருக்கும். வீட்டு வேலை செய்து அம்மா வேறு பணம் வைத்திருப்பாள். வாங்கி வந்து, பொழுது விடிந்ததும் சம்பளத்தைக் கட்டி விட்டால் தீர்ந்தது தொல்லை-கவலை எல்லாம்—என்று எண்ணிக் கொண்டே ஓடிக் கொண்டிருந்தான்.

வானம் குமுறிக் கொண்டிருந்தது. இடியும் மின்னலும் பயமுறுத்திக் கொண்டிருந்தன.

அம்மையப்பன் என்ற சிற்றூரை தாண்டி விட்டான். இன்னும் சிறிது தூரம்தான்... மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓடி விட்டால் முகந்தனூர்!...'என்னென்ன பேசி விட்டார் அந்த தலைமை ஆசிரியர்! என் படிப்பில் மண் விழுந்து விடும் என்றல்லவா சொன்னார்!'—ராசுவின் மனம் குமுறியது; அவனையும் அறியாமல் கண்கள் நீரைக் கக்கின! மூன்றுமைல் ஓடி வந்த களைப்பு தாங்க முடியவில்லை!

நன்றாக இருட்டி விட்டது. வானம் உறுமியது 'சடசட' வென்று மழைத்துளிகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக விழுந்தன.

முகந்தனூர் வந்து விட்டது. தன் குடிசையையும் நெருங்கி விட்டான் ராசு. உள்ளே நுழைந்தான். அங்கே ஒரே இருள்! என்ன ஒரே இருட்டு! எங்கே அப்பா, அம்மா, தம்பி—ஒருவரையுமே காணோம்?—என்று முணுமுணுத்துக் கொண்டே வழக்கமாக நெருப்புப்பெட்டி இருக்கும் மாடத்தில கைவைத்துத் தேடினான். பெட்டி கிடைத்தது; எடுத்துக் கிழித்தான். அந்த வெளிச்சத்தில் குடிசையின் ஒரு மூலையில் ஏதோ ஒரு உருவம் அழுக்கடைந்துபோன பழைய வேட்டி ஒன்றால் இறுக மூடிக் கொண்டு படுத்திருப்பதைப் பார்த்தான். 'யாரது?' என்று முணுமுணுத்துக் கொண்டே விளக்கை ஏற்றினான்.

அதே சமயம் ''யார்து?'' என்று கேட்டுக் கொண்டே அந்த உருவமும், தன் முகத்தை மூடியிருந்த துணியை விலக்கியது. ராசு பார்த்தான். அவன் அப்பாதான்!

''அடே ராசுவா? என் கண்ணு ராசுவா? வாடாப்பா, நல்லா படிக்கிறியா?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்தான் அவன்.

''அதெல்லாம் இருக்கட்டுமப்பா! இப்போ எனக்கு அவசரமா நாலு ரூபா வேணும்!''

''என்ன?...நாலு ரூபாயா?...'' என்று பெரு மூச்சுடன் கேட்டான், ராசுவின் அப்பா. மறுகணம் 'கொல், கொல்' லென்று இருமினான். எச்சிலைக் காறி உமிழ்ந்தான்!

''ஆமாம்; நாலு ரூபாதான்! இல்லாட்டி என் படிப்பெல்லாம் பாழ்தான்! இதோ, நான் இப்பவே திரும்பிப் போகணும்!'' என்று அவசரப்படுத்தினான் ராசு.

''என்ன ராசு, இப்படிப் பேசுறே! என் கிட்டே ஏது பணம்? ஒரு வாரமா கடுமையான காய்ச்சல்—என் உடம்பைப் பார்! வேலைக்கும் போகலே! மாட்டுக்காரவங்க எல்லாம் சண்டைக்கு வர்ராங்க; மானமில்லாம பேசறாங்க...''

''என்னையும்தான் எங்க வாத்தியார் மானமில்லாம பேசறாரு. எனக்கு எப்படியாச்சும் பணம் வேணும்ப்பா!''

''அட, பைத்தியக்காரப் புள்ளே! நாலு அணாவுக்கு வழியில்லியேடா!

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்

# கணைப்பக்கம்
## எழுத்தாணி

எஸ். வி. மோய்தீன்; சென்னை 6.

(?) வடநாட்டுப் புத்தருக்கு சிலை நிறுவிகொண்டாடியது ஏன் என்ற கேள்விக்கு 'நாகத்திடம் ரத்தினமிருந்தால் அதைத் தூக்கியா எறிவது' என்று பதில் கூறியிருக்கிறீர்! அப்படியானால் நாகம் எது? புத்தரா? வடநாடா?

வடநாடு என்ற நாகத்திடம் புத்தர் என்ற ரத்தினம் இருந்தால் அதைத் தூக்கியா எறிவது என்றுதான் குறிப்பிட்டுள்ளேன் இது கூடவா புரியவில்லை உமக்கு!

குமாரசாமி; தம்மம்பட்டி.

(?) இலங்கையில் இருபத்தைந்து தமிழர்கள் கொலை செய்யப்பட்டதால் என்ன தெரிகிறது?

சிங்களவர்கள் வெறியர்களென்றும்; காமராசர் ஒரு மரக்கட்டை யென்றும் தெரிகிறது!

கே. பி. ஏ. சாகரன்; மதுராந்தகம்.

(?) இமயத்திலுள்ள தவளகிரி சிகரத்தில் ஏறமுடியவில்லையாமே; ஏன்?

எவரெஸ்ட் சிகரத்தில் மனித நடமாட்டம் இருப்பதால் எம்பெருமான் கைலைநாதர் இப்போது தவளகிரிக்கு 'கேம்ப்' மாற்றி விட்டாரோ என்னவோ!

சாமுவேல்; பாளையங்கோட்டை.

(?) தற்கொலை செய்து கொள்ள சிறந்த வழி எது?

நீர் தமிழராக இருந்தால் உடனே சிலோனுக்குச் செல்லுங்கள், சிங்களவர் சிரமமில்லாமல் உம் இலட்சியத்தை ஈடேற்றி வைப்பார்கள்!

மணிவர்மன்; குடந்தை.

(?) ராஜேந்திர பிரசாத் சுதந்தர நாளைக் கொண்டாட சென்னைக்கு வரப்போகிறாராமே; ஏன்?

அப்படியாவது, 'நாம் சுதந்தரம் வாங்கிவிட்டோம்' என்பதை சென்னை வாசிகளுக்கு உணர்த்துவதற்குத்தான்!

அப்துல் ரகீம்; வாணியம்பாடி.

(?) திராவிடம் விடுதலை பெறுவதால் நாம் இழப்பவைகள் என்னென்ன?

'வடநாட்டுக்கு அடிமை!' என்ற இரு வார்த்தைகளை!

கே. வி. கிருட்டினன், அரிசிப்பாளையம்.

(?) காவிரி மண்ணை உம்மால் எண்ண முடியுமா?

அதுகூட முடியும், முயன்றால்! ஆனால் மோதிலால் புதல்வர் இதுவரை உதிர்த்திருக்கும் வார்த்தைகளைத்தான், அய்யா; கணித மேதைகளாலேயே கணக்கிட முடியவில்லை!

ஆர். எம். ராயப்பன்; கோவை.

(?) நேரு வெளிநாடு சென்றிருப்பதால் என்ன லாபம்?

மிளகாய் இனிப்பது போலத் தெரிகிறதாம்-காரணம் காட்டமான அவரது பேச்சுகள் கொஞ்ச நாட்களாக வெளிவரவில்லையாம்!

கோதண்டராமன்; சென்னை 2.

(?) வருகிற தேர்தலில் மந்திரி சுப்ரமணியனும் குமாரசாமிராஜா வாகிவிட்டால் ?

பிரெஞ்சு நாட்டுப் போலன் கதை திரும்பவும் நடைபெறுமலிருக்க, அவருக்கும் ஒரு பதவித் துண்டை வீசி யெறிந்து பத்திரமாக வெளிமாகாணத்துக்கு அனுப்பிவிடுவார்கள், மத்திய அரசாங்கத்தார்!



**கருணாநிதி நிகழ்ச்சிகள்.**

ஜூலை- 6 சென்னை—ஆயிரம் விளக்கு (அறிவு வளர்ச்சி மன்றம்)
,, 8 அம்மாபேட்டை (தஞ்சை)
,, 15 சென்னை-கடற்கரை பொதுக்கூட்டம்
,, 16 கல்லக்குடி.
,, 22 சென்னை-மிர்சாகிப் பேட்டை
,, 27 முக்கூடல்
,, 28 சங்கரநயினார்கோயில்
,, 29 ராசபாளையம்
,, 30 ஸ்ரீவைகுண்டம்.

[ஜூலையில் வேறு நாட்கள் ஓய்வில்லை. ஆகஸ்டில், திருச்சி, ராமநாதபுரம் மாவட்ட சுற்றுப் பயணம். வேறு ஊர்களில் கலந்துகொள்ள இயலாது.]

# வாழ்க ம. பொ. சி!

பொது வாழ்வுத் துறையைத் தமிழகம் மதிக்கிறது; கௌரவிக்கிறது—என்பதை எடுத்துக் காட்டுவதைப்போல செந்தமிழ்ச் செல்வர் ம. பொ. சி. அவர்களுக்கு பொன் விழா நடத்தி, பாராட்டுகளைக் குவித்திருக்கிறது, நாடு!

அன்றைய தினம் அரசியல் தலைவர்கள், அறிஞர்கள், கலைஞர்கள் அனைவருமே ஒன்றுகூடி அன்பர் ம. பொ. சி. க்கு வாழ்த்துக் கூறியிருக்கின்றனர்.

டாக்டர் வரதராசனார் அழகாக எடுத்துக் காட்டியதைப் போல அன்றைய தினம் 'தமிழ் வாழ வேண்டும், தமிழ் நாடு வாழ வேண்டும், உலகம் வாழ வேண்டும்-என்ற விருப்பத்தால் பாடுபடுபவர்' பெருமைப்படுத்தப்பட்டிருக்கிறார்.

இத்தகைய பொன்விழா நிகழ்ச்சிக்கு வித்திட்டவர்கள் நாட்டு மக்களின் பாராட்டுக்குரியவர்களாகிறார்கள்.

இந்த மகிழ்ச்சி நிறைந்த வேளையில் நாமும் மன நிறைவால் வாழ்த்துகிறோம், ம. பொ. சி. வாழ்க, வாழ்க-என்று!





பொதுக்கூட்டம்
சென்னை
ஆயிரம் விளக்கு
6—7—56 மாலை
தலைவர்: முல்லை சத்தி
பேசுவோர்:
**மு. கருணாநிதி**
புலவர் நன்னன்

ஆசிரியரும், உரிமையாளரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம், 4-128, மவுண்ட் ரோடு, சென்னை-6.

